# கல்கி

KALKI 2-2-1975 60 காசு



'தலைவர் தரிசனம்': மு. கருணாநிதி

# குழந்தைச் செல்வங்கள் எப்பொழுதும் முன்னணியில் நின்றிட அதிக சக்தியின் தேவையை நிறைவு செய்யுங்கள்







## நீங்களும் உங்கள் குழந்தைக்கு நாள்தோறும் போர்ன்விடா கொடுங்கள்

டங்கள் குழந்தை முன்னணியில் நின்றிட அதிக சக்தியின் தேவையை பூர்த்தி செய்ய வல்லது மால்ட், பால், சர்க்கரை, கோகோ அடங்கியுள்ள போர்ன்விடா பானமாகும். ஒவ்வொரு டம்ளரிலும், ஊட்டத்திற்கு அதி தேவையான புரதம் கார்போஹைட்ரேட்கள், கலோரிகள் அடங்கியுள்ளது.
அதனாலேயே உங்கள் குழந்தைக்கும் தினம் போர்ன்விடா கொடுங்கள்— இரண்டு வேளைகளிலும், உங்களுக்கும் அது உகந்தது. போர்ன்விடா குடும்பத்தில் எல்லோரும் விரும்பும் ஒரு பானம்.

காட்பரிஸ்
# போர்ன்விடா
வளரும் குழந்தைகளுக்கு
இனிய போர்ன்விடா




OBM-4024 TM



# கல்கி

ஆனந்த தை. 20
பிப்ரவரி 2, 1975

★

"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்களே; சம்பவங்களும் கற்பனையே.

அடுத்த வாரம்:

## மாதர் சிறப்பிதழ்

உலகெங்கும் மக்கள் தொகை அதிகரித்து வருவதில் உள்ள அபாயத்தை உணர்த்தும் ஆண்டாக 1974ஐ கருதிய ஐ. நா. சபை, 1975ம் வருஷத்தை சர்வதேச மாதர் ஆண்டாக எண்ண வேண்டுமென தீர்மானம் நிறைவேற்றியுள்ளது. அத் தீர்மானம் மாதர் அடைந்துள்ள முன்னேற்றங்களைச் சுட்டிக் காட்டுவதுடன் அவர்கள் இன்னும் பெற வேண்டிய உரிமைகளையும் வலியுறுத்துகிறது.

இந்தியாவைப் பொறுத்தவரை மாதர் சிறப்பிதழ் ஒன்றல்ல, ஒன்பது பிரசுரித்தாலும் இன்று பாரதப் பெண்மணிகள் அடைந்துள்ள முன்னேற்றத்துக்கு நியாயம் செய்ததாகாது. பாரதி கூறியதுபோல், 'ஆண்களோடு பெண்களும் சரிநிகர் சமானமாக' இன்று வாழ்ந்து வருகிறார்கள். பாரதத்திலேயே மிகச் சக்தி வாய்ந்த பதவியை வகித்து வரும் நமது பிரதமரே இதற்குப் போதிய அத்தாட்சி.

ஆனால் பாரதி மற்றொன்றும் சொன்னார். 'மாதர் தம்மை இழிவு செய்யும் மடமையைக் கொளுத்துவோம்' என்றார். இதை நாம் நிறைவேற்றியதாகக் கூற முடியாது. அந்த மடமை இன்னும் நீடிக்கவே செய்கிறது.

மாதர்களின் மாண்பினையும் அவர்களை இழிவு செய்யும் மடமையையும் எடுத்துக் காட்டும் கட்டுரைகள், சிறுகதைகள், பேட்டிகள், நகைச்சுவைகள் போன்ற பல அம்சங்களையும் தாங்கி அடுத்த இதழ் மலர்கிறது.

—ஆசிரியர்

# மனமிருந்தால் வழியுண்டு சேமிக்க

சம்பள தினம் என்ன? எந்த நாளிலும் சேமிக்கலாம்,. மனம் மட்டும்' இருந்தால், சந்தேகமே இல்லை.

சேமிக்கத் தீர்மானியுங்கள். (இன்றே இதைச் செய்யலாமே) சேமிக்கும் தொகையை தபால நிலைய ரிகரிங் டெபாசிட் கணக்கில் போடுங்கள். மாதம் 10 ரூபாய் போட்டு வந்தால் கணக்குத் தொகை 5 ஆண்டுகளில் 750 ரூபாயாக வளரும். அதாவது, உங்கள் பணத்திறகு 9.25% தொடர் வட்டி கிடைக்கும.

நீங்கள் 2 ஆண்டுகள் சீராகச் சேமித்தால் சிறியதொரு இன்ஷ்யூரன்ஸ் வசதியும் கிடைக்கும்; கணக்கு வைத்திருப்பவர் ஒரு !வேளை அகால மரணம் அடைந்தால், மேற்கொண்டு பணம் செலுத்த வேண்டிய அவசியமின்றி, கணக்கின் முழுத் தொகையான 750 ரூபாயும் அளிக்கப்படும்.

விவரங்களுக்கு
அருகிலுள்ள
தபால் நிலையத்தில்
விசாரியுங்கள்.

அல்லது இந்த
முகவரிக்கு எழுதுங்கள்:



தேசிய சேமிப்பு
நிறுவனம்
த. பெ. எண் 96
நாக்பூர்

davp 74/309

# மண்ணைக் கவ்விய காட்சி

ஜபல்பூர் பாராளுமன்ற உபதேர்தலில் இந்திரா காங்கிரஸ் மண்ணைக் கவ்வியது என்று சொன்னால் மட்டும் போதாது. அதை விட மோசமான அளவில் படுதோல்வி அடைந்திருக்கிறது. கடந்த ஐம்பது ஆண்டுகளாகக் காங்கிரஸ் கோட்டையாக இருந்து வந்த தொகுதி. ஸேத் கோவிந்த தாஸ் இந்தத் தொகுதியில் அடுத்தடுத்துப் பலமுறை வெற்றி பெற்றிருக்கிறார். அந்தப் பிரபை நீங்கக் கூடாது என்பதற்காக அவரது பேரனையே அபேட்சகராக்கியது இந்திரா காங்கிரஸ். இருப்பினும் எண்பத்து ஏழாயிரம் வாக்குகள் வித்தியாசத்தில் திரு யாதவ் மகத்தான வெற்றி பெற்றிருக்கிறார். இந்தத் தேர்தல் இந்திரா அரசிடம் மக்கள் எவ்வளவு அதிருப்தி அடைந்திருக்கிறார்கள் என்பதை உள்ளங்கை நெல்லிக் கனி போல் எடுத்துக் காட்டுகிறது. ஜபல்பூரில் மட்டுமல்ல, நாடு முழுவதுமே இந்நிலை தான். எனவே இந்த உபதேர்தலின் அடிப்படையிலேயே இந்திரா அரசு ராஜிநாமாச் செய்ய வேண்டும் என்று கோருவதானாலும் அதில் பிசகில்லை.

கல்கி

மலர் 34
இதழ் 27

மற்றொரு முக்கியமான விஷயத்தையும் இத்தேர்தல் உணர்த்துகிறது. எதிர்க் கட்சிகள் ஒருங்கிணைந்து செயல்பட்டால் வெற்றி உறுதி என்பதைக் காட்டுகிறது. இத்தேர்தலில் பாரதிய லோக தளம், ஜனசங்கம், ஸ்தாபன காங்கிரஸ் ஆகியன யாதவ் அவர்களுக்கு ஆதரவு அளித்தன. மார்க்ஸிஸ்டுகள், சோஷலிஸ்டுகள், சர்வோதய ஊழியர்கள் ஆகியோரும் உழைத்தனர்.

எதிர்க் கட்சிகள் பிளவு பட்டிருப்பதாலேயே சிறுபான்மை மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட ஒரு கட்சி பாராளுமன்றத்தில் பெரும்பான்மை பலம் பெற்று ஆட்சியில் அமர முடிகிறது. எனவே எதிர்க் கட்சிகள் ஒருங்கிணைய வேண்டியது அவசியம். இச்சந்தர்ப்பத்தில் பாரதிய லோக தளம் தனது பெயரோ கட்சிச் சின்னமோ கொடியோ அல்லது தலைமையோகூட எதிர்க் கட்சிகளின் இணைப்புக்குத் தடையாக இருக்காது என்று கூறியுள்ளதை மகிழ்ச்சியுடன் வரவேற்கிறோம். நாட்டு நலனை உத்தேசித்து அந்தக் கட்சியும் அதன் தலைமையும் எவ்வளவு பெரிய தியாகங்களைச் செய்யத் தயாராக இருக்கிறது என்பதை ஜனசங்கமும் ஸ்தாபன காங்கிரஸும் சிந்திக்க வேண்டும். அதே தியாக உணர்வுடன் இந்த அருமையான நல்வாய்ப்பினைப் பயன்படுத்திக்கொள்ள உடனடியாக முன்வரவேண்டும். கம்யூனிஸ்டுகள் அல்லாத எதிர்க் கட்சிகள் இணைய வசதியாகத் தனது கொள்கைகளைக் கூட விட்டுக் கொடுக்கத் தயாராக இருப்பதாகப் பாரதிய லோக தளம் கூறுகிறது. காந்திய போதனைகளின் அடிப்படையில் பொதுவான ஒரு புதுத் திட்டம் வகுத்துக்கொள்ளலாம் என்கிறது.

இவ்விதம் ஒன்றுபட்டுக் குரல் எழுப்பினால்தான் திமர்த் தேர்தல் சூழ்ச்சியை முறியடிக்க முடியும். திரு காமராஜ் விரும்புவது போல் தேர்தலுக்கு முன்னால் எதிர்க் கட்சிகளுக்கு நிறைய அவகாசம் கிடைக்கும். பண பலத்தாலன்றித் தேர்தல் நியாயமாக நடக்கவும் வழி பிறக்கும். அதிகார துஷ்பிரயோகத்துக்கு இடமின்றித் தேர்தலுக்கு ஆறு மாதங்களுக்கு முன்னால் இந்திரா அரசு, ஆட்சியை ராஷ்டிரபதியிடம் ஒப்படைத்துவிட வேண்டும் என வற்புறுத்துவது கூட சாத்தியமாகலாம்.

பீகாரில் இந்திரா காங்கிரஸுக்குத் தேர்தலில் ஒரு ஸ்தானம் கூடக் கிடைக்காது என்கிறார் ஜே. பி. கம்யூனிஸ்டுகள் அல்லாத எதிர்க் கட்சிகளின் இணைப்புக்கு ஜெயப்பிரகாசரின் ஆதரவும் ஆசியும் கிடைத்தால் பீகார் என்ன, நாடு முழுவதுமே இந்திரா காங்கிரஸ் இருந்த இடம் தெரியாமல் போகும்!

தமிழ்த்திருநாடு தன்னைப் பெற்ற - எங்கள் தாயென்று கும்பிடடி பாப்பா — பாரதியார்

# என்ன சேதி?

### முதலிடமும் ஐம்பதாவது ஸ்தானமும்

"தேயிலை உற்பத்தியில் நமது நாடு உலகில் முதல் ஸ்தானம் வகிக்கிறது. காப்பி உற்பத்தியில் நான்காவது ஸ்தானம் வகிக்கிறது. இதே இந்திய மண்ணில், இதே பருவ மழைச் சூழலில், இதே இந்தியர்கள் விவசாயம் பண்ணும்போது மட்டும் நாம் பின்தங்கிவிடுவது ஏன்? அரிசி உற்பத்தியில் ஐம்பதாவது ஸ்தானத்தையும் பருத்தி உற்பத்தியில் நாற்பதாவது ஸ்தானத்தையும் வகிக்கும் துர்ப்பாக்கிய நிலை எப்படி ஏற்பட்டது?" என்று கேட்கிறார் திரு எம். ஏ. ஸ்ரீனிவாசன். அவரே பதிலும் கூறுகிறார்.

"இந்த வித்தியாசத்துக்கு அடிப்படைக் காரணம் விவசாயத்தை ஒரு தொழில்துறையாகக் கருதாததுதான்" என்கிறார். "விவசாய நிலம் அரசியலின் விளையாட்டுக் களம் ஆகிவிட்டது. நிலச் சீர்திருத்தம் என்பது அந்த விளையாட்டின் பெயர். ஒரு கட்சி நிலச் சீர்திருத்தம் செய்தால் அடுத்துப் பதவிக்கு வரும் இன்னொரு கட்சி நிலச் சீர்திருத்தத்தைச் சீர்திருத்துகிறது! நில உடைமைக்கு உச்சவரம்பு மட்டுமல்ல, நில உடைமை என்பதே நிச்சயமற்ற விஷயமாகி விட்டது. விவசாய வருமான வரியோ பெருஞ் சுமை. எனவே, விவசாயத்தில் முதலீடு செய்யச் செல்வந்தர்கள் தயங்குகின்றனர். முதலீடு இல்லாமல் வாடுவதாலேயே விவசாய உற்பத்தியில் நாம் மிகவும் பின்தங்கி இருக்கிறோம்."

சுயநல அரசியலிலிருந்து விவசாயத்தை விடுவித்தாலன்றி முன்னேற்றம் சாத்தியம் இல்லை.

### சர்வோதய தினம்

சென்னை காந்தி மண்டபத்தில் சர்வோதய தினத்தைச் சிறந்த முறையில் கொண்டாட ஆளுநர் திரு கே. கே. ஷா ஏற்பாடு செய்திருக்கிறார்.

காலை ஏழே கால் மணிக்குத் தியாகையரின் பஞ்சரத்ன கிருதிகளைப் பிரபல வித்வான்கள் பாடுகிறார்கள். பிறகு நூற்பு யக்ஞம், அகண்ட பஜனை, குரான், பைபிள், கீதை பாராயணம் ஆகியன உண்டு. மாலையில் சேலம் ஸ்ரீமதி ஜெயலக்ஷ்மி திருப்புகழ் பாடுகிறார். பின்னர் பொதுக்கூட்டத்தில் ஆளுநரும், ஸ்ரீமதி ஷாவும், திரு ம. பொ. சி., திரு ஆர். வேங்கடராமன் ஆகியோரும் பேசுகின்றனர். பித்துக்குளி முருகதாஸின் பக்தி கீதங்களும் உண்டு. மக்கள் பெருமளவில் கலந்துகொண்டு மகாத்மாவை எண்ணி மனத் தூய்மை பெறக் கோருகிறோம்.

### முள்ளும் மலரும்

"ஏற்கெனவே பத்தாயிரம் டன் அரிசி தமிழகத்துக்கு ஆந்திரம் தந்துள்ளது. என்றாலும் மேலும் உதவி அளிக்கத் தயார். மத்திய உணவு அமைச்சரைக் கலந்து கொண்டு ஆவன செய்வேன்" என்று கூறியுள்ளார் ஆந்திர முதல்வர் வெங்கல் ராவ். அவர்களுக்கும் தமிழகத்துக்கு ஒதுக்கியுள்ள கோதுமையின் அளவைப் பஞ்ச நிலையை உத்தேசித்து இரட்டிப்பாக்கியுள்ள மத்திய அரசுக்கும் மனப்பூர்வமாக **நன்றி கூறுவோம்.**

எண்ணூர் அனல் மின் நிலையத்தின் உற்பத்தி ஆற்றலில் நாற்பது சதம்தான் உற்பத்தியாகிறது என்றும் அதைச் சீர்திருத்த என்ன செய்யலாம் என்று சோதிக்குமாறு பாரத் ஹெவி எலெக்ட்ரிகல்ஸ் நிறுவனத்தைத் தாம் கேட்டுள்ளதாயும் திரு கே. வி. பந்த் கூறியுள்ளார். இது வரை இது விஷயத்தில் எந்தவித நடவடிக்கையும் எடுக்காமல் காலம் கடத்தி வந்துள்ள தமிழக பழைய மின்சார அமைச்சர் திரு ஓ. பி. ராமனுக்கும் புதிய மின்சார அமைச்சர் சாதிக் பாட்சாவுக்கும் **'வெங்காயங்கள்' பரிசளிக்கிறோம்.**

தொழிலாளர் நலவமைச்சர் திரு ராஜாராம் அவர்கள் உற்பத்தியைப் பாதிக்கும் வேலை நிறுத்தங்களுக்கும் கதவடைப்புகளுக்கும் நாட்டின் பொருளாதார நிலையை உத்தேசித்துச் சில காலத்துக்குச் சட்டபூர்வமாகத் தடை விதிக்கலாம் என்று துணிந்து கூறியுள்ளதைப் பாராட்டி **ரோஜா மலர் வழங்குகிறோம்.**

---

ராஜாஜி சிந்தனை

### அண்ணாதுரை பெற்ற தண்டனை

ஹிந்தித் திணிப்புக்குப் பெருவாரியான மக்களின் எதிர்ப்பைத் தெரிவிக்கும் வகையில் திரு அண்ணாதுரை அரசியல் சாசனத்தின் ஒரு நகலை எரித்ததற்காகக் கைதாகித் தண்டனையும் பெற்றிருக்கிறார்.

அரசியல் சாஸனத்தின் நகலை எரிப்பதே குற்றம் என்னும் அளவுக்கு அது அவ்வளவு பவித்திரமானது என்றால் அந்த மூல சாசனத்தையே இஷ்டப்படியெல்லாம் திருத்தி அடிப்படை உரிமைகளை ஒவ்வொன்றாகப் பறிப்பது எத்தனை படுபாதகமான செயல்! மூல சாசனத்தைப் பதவியில் உள்ளோர் பாழாக்குவதைத் தடுக்கச் சட்டம் இயற்றப்படாத போது அதன் ஒரு நகலை எரித்ததற்குத் தண்டனை வழங்குவது எவ்வளவு அபத்தம்? அரசின் மொழிக் கொள்கையும் சரி, இந்தத் தண்டனைக் கொள்கையும் சரி முக்கியமான உண்மைகளுக்கு எதிரானவை.

—சுயராஜ்யா டிசம்பர், 28, 1963

---

# இப்போது!

## ஸ்பென்ஸர்ஸ் டீ

ருசியும் மணமும் குன்றாமலிருக்க
அழகான, புதிய அட்டைப் பெட்டிகளில்
கிடைக்கிறது!







நீலகிரி மலைச் சிகரங்களின்.
நிகரற்ற டீ.
சுவை மிகுந்தது.
புதுச் சுவை மாறாதது!

**ஸ்பென்ஸர் & கோ. லிமிடெட்**
சென்னை மற்றும் கிளைகள்

FDS ST 3100 TM

# புதிய சிறப்புக்கள்: பம்பாயின் வாழ்த்துக்கள்!



1



3

மக்ஸஸேஸாய் விருது பெற்ற ஸ்ரீமதி எம். எஸ். சுப்புலக்ஷ்மி அவர்களுக்குத் தாய் நாடு திரும்பியபின் மேலும் புதிய கௌரவங்கள் காத்திருந்தன. சங்கீத நாடக அகாடமியின் கௌரவ அங்கத்தினர் என்ற அந்தஸ்து அண்மையில் அவருக்கு வழங்கப்பட்டது. ஏற்கனவே பத்மபூஷண் விருது பெற்றுள்ள ஸ்ரீமதி எம்.எஸ்ஸுக்கு இவ்வாண்டு குடியரசு தினத்தையொட்டிப் பத்ம விபூஷண் விருது அறிவிக்கப்பட்டுள்ளது.



4




2

படங்கள்: (1) சமீபத்தில் பம்பாய்க்கு விஜயம் செய்த ஸ்ரீமதி எம். எஸ். அவர்களைப் பாரதீய வித்யாபவனத்தின் தலைமைக் கேந்திரம் வரவேற்றுக் கௌரவித்தது. மகாராஷ்டிர கவர்னர் அலி யவார் ஜங் ஸ்ரீமதி எம். எஸ். அவர்களின் இசைத் திறனையும் உபகார சிந்தனையையும் வாழ்த்திப் பரிசு வழங்குகிறார். (2) பிரிட்டிஷ் அரச வம்சத்தைச் சேர்ந்தவரும் எடின்பரோ சங்கீத விழாத் தலைவருமான ஹார்வுட் பிரபு இவ்விழாவில் சிறப்பு விருந்தினராகக் கலந்துகொண்டு வாழ்த்துரை கூறினார். பவனத்தில் நடந்த கச்சேரியை ஹார்வுட் தம்பதி ரசித்து மகிழ்கின்றனர். (3) மகாராஷ்டிர கவர்னருக்குப் பவனத்தின் தலைவர் தாம்லே கட்டாஸ் பரிசு வழங்குகிறார். திரு தாம்லே கட்டாஸ் ஸ்ரீமதி எம். எஸ். பவனத்துக்குச் செய்துள்ள, செய்வதாக வாக்களித்துள்ள உதவியை நன்றியுடன் நினைவுகூர்ந்தார். (4) வைபவத்தில் கலந்து கொண்ட பம்பாய் பிரபலஸ்தர்களில் ஒரு பகுதி. (5) பம்பாய் ஸ்ரீ சங்கர மடத்துக்காக ஸ்ரீமதி எம்.எஸ். நிகழ்த்திய உதவிக் கச்சேரி லட்சத்து நாற்பதாயிரம் ரூபாய் வசூலித்தளித்தது. இரண்டரை மணிநேரம் என்று அறிவிக்கப்பட்டிருந்தும் ரசிகர்களின் ஆர்வம் நாலு மணி நேரத்துக்கு அதனை நீடிக்கச் செய்தது. இந்த இன்னிசை நிகழ்ச்சிக்குச் சிறப்பு விருந்தினராக வந்திருந்த திரு பால்கிவாலா, திரு நாராயண மேனன் ஆகியோரை சதாசிவம் தம்பதியுடனும் ஸ்ரீமதி விசுவநாதனுடனும் காணலாம். இடது கோடியில் பம்பாயின் கல்கி பிரதிநிதி திரு ஆர். கண்ணன்.



5

# எனக்குக் கனகதாரை



ஜகத்குரு ஸ்ரீகாஞ்சிகாமகோடி
சங்கராசாரியசுவாமிகள்



5

எனக்குக் கனகாபிஷேகம் பண்ணியிருக்கிறீர்கள். என்னைவைத்துப் பொன்விழாஎன்று கொண்டாட வந்திருக்கிறீர்கள். எனக்கோ இதற்கு முன் நானும் ஒருவரைக் கொண்டாடும் தொண்டனாக இருக்க வேண்டும் என்று இருந்தது. அதற்காகத்தான் நானும் ஒருத்தரை — இரண்டு பேரை — கொண்டாடி நமஸ்காரம் பண்ணுவதற்காகக் கலவைக்குப் போனேன். அந்த ஊரில் என்ன விசேஷம், அந்த இரண்டு பேரும் யார்? என் குருவும், பரம குருவும்தான் அவ்விருவர். குருவின் குருவைப் பரம குரு என்பார்கள். பரம குருவுக்கும் குரு பரமேஷ்டி குரு. பரமேஷ்டி குருவுக்கும் குருவாக இருக்கப்பட்டவர் பராபர குரு. என்னை குரு என்று வைத்து நீங்கள் நமஸ்காரம் பண்ணும்போது, இவர்களை யெல்லாம் பற்றிக் கொஞ்சம் சொல்லி, நானும் அவர்களை நமஸ்காரம் பண்ணுகிறேன்; உங்களையும் பண்ண வைக்கிறேன்.

என் குரு, பரமகுரு இரண்டு பேரும் கலவையில்தான் சித்தி அடைந்தார்கள். இங்கே இருந்து முப்பது மைலில் வடார்க்காட்டில் கலவைக் கிராமம் இருக்கிறது. 'கலவை' என்கிற பேர் அதற்கு இவர்கள் ஸித்தி அடைந்ததால் ஒரு புதிய அர்த்தத்தில் பொருந்துகிறது. இரண்டறக் கலக்கிற இடம் கலவை என்று அர்த்தம் சொல்லலாம் போலத் தோன்றுகிறது. கங்கை நதி சமுத்திரத்தோடு கலக்கிறது போல ஜீவாத்மா வேறுபாடு இல்லாமல் பரமாத்மாவுடன் கலந்து விட்டால் அதுவே கலவை. என் குருவும் பரமகுருவும் பரமாத்மாவோடு இப்படிக் கலந்த இடம் கலவை.

அவர்களுக்கு முந்திய ஆசார்யாள் என் பரமேஷ்டி குரு. இவர்களைப் போலவே அவர் ஸித்தி அடைந்த இடத்தின் பெயரிலும் ஒரு பொருத்தம் தெரிகிறது. அந்த ஊருக்குப் பேர் இளையாற்றங்குடி. அது புதுக்கோட்டைக்குத் தெற்கே ராமநாதபுரம் ஜில்லாவில் இருக்கிறது. நான் சொல்லுகிற ஆசார்யாள் ராமேசுவர யாத்திரையில் அவ்வழியே சுற்றி வரும்போது பிரயாணத்தின் நடுவே இந்த ஊரில் தங்கினார். அப்போது அங்கே சப்பாத்திக் காடே அதிகம் இருந்ததாம். என்ன காரணமோ அவர் இந்த ஊரில் தங்கினார். வில்வ மரம் ஒன்றின் அடியில் தங்கினார். பூஜை செய்தார். இரவு ஒரு மணி வரையில் அப்படியே சமாதி நிஷ்டையில் இருந்து ஸித்தியாகி விட்டார். அந்த இடத்திலேயே சமாதி வைத்து 'அதிஷ்டானம்' என்று கோயில் கட்டினார்கள். சமாதியின் மேலே சிவலிங்கப் பிரதிஷ்டை செய்து கோயில் கட்டினால் அதற்கு 'அதிஷ்டானம்' என்று பேர். அல்லது, ஒரு சந்நியாசியைப் புதைத்த இடத்துக்கு மேல் துளசி மாடமும் வைக்கலாம்; இப்படிப் பண்ணினால் அதற்கு 'பிருந்தாவனம்' என்று பெயர். கலவையில் என் குருவுக்கும் பரம குருவுக்கும் அடுத்தடுத்துப் பிருந்தாவனம் இருக்கிறது. இளையாற்றங்குடி பரமேஷ்டி குருவின் சமாதி ஸ்தானம் சிவன் கோவிலாக — அதிஷ்டானமாக இருக்கிறது. அந்த ஊரின் பேர்ப் பொருத்தத்துக்கு வருகிறேன். அது செட்டி நாட்டில் இருக்கிறது. செட்டி நாட்டில் நாட்டுக்கோட்டை நகரத்தாருக்கு முக்கியமாக ஒன்பது சிவாலயங்கள் இருக்கின்றன. அவற்றில் இளையாற்றங்குடி பிரதானமாக உள்ளது. நான் சொல்லுகிற பரமேஷ்டி குரு எத்தனையோ ஊர்கள் சுற்றிவிட்டு, தெற்குக் கோடிவரை சஞ்சாரம் பண்ணிக் கடைசியில் நிரந்தரமாக இளைப்பாறுவதற்காக இந்த ஊரைத்தான் தேர்ந்தெடுத்திருக்கிறார். அந்த ஆசாரியாளுக்கு இளைப்பாறும் குடியாக இருந்திருக்கிறது இந்த இளையாற்றங்குடி.

இந்தப் பரமேஷ்டி குருவின் குருதான் பராபர குரு. அவரும் நிறைய சஞ்சாரம் செய்து திக்விஜயம் பண்ணினவர். அவர் திருஆனைக்காவுக்குச் சென்றது விசேஷமானது. ஜம்புகேசுவரம் என்று திருச்சிராப்பள்ளிக்குப் பக்கத்தில் இருக்கிற மகா க்ஷேத்திரம் அதுதான். அங்கே அம்பாள் அகிலாண்டேசுவரியாகப் பிரசித்தியுடன் இருக்கிறாள். இங்கே காஞ்சி காமாக்ஷி கோயிலில் ஸ்ரீ சக்கரத்தை சிலா ரூபத்தில் பிரதிஷ்டை செய்த பகவத்பாதாள், அகிலாண்டேசுவரி ஆலயத்தில் ஸ்ரீ சக்கரம், சிவ சக்ரம் இரண்டும் பிரதிஷ்டை பண்ணியிருக்கிறார். அதிலே விசேஷம் என்னவென்றால் இவற்றை இரண்டு தாடங்கங்களின் (காதணி) ரூபத்தில் பிரதிஷ்டை செய்து, தாடங்கங்களை அகிலாண்டேசுவரிக்கே அலங்காரமாக அணிவித்து விட்டார். அவளுடைய உக்ர கலையைச் சக்ரங்களில் ஆகர்ஷித்து, அவளுக்கே ஆபரணமாகப் பூட்டி விட்டார். அவ்வப்போது, பல வருஷங்களுக்கு ஒரு முறை இந்தத் தாடங்கங்களைப் புதுப்பித்துச் சாத்துகிறது உண்டு. அம்மாதிரி நான் சொல்கிற ஆசாரியாள் புதுப்பித்து, அகிலாண்டேசுவரிக்குத் தாடங்கப் பிரதிஷ்டை செய்து விட்டு வந்தார். அவர் கும்பகோணம் திரும்பியதற்கு நடுவிலே நடந்த ஒரு சம்பவத்துக்கும் இப்போது நான் மேலே போட்டுக் கொண்டிருக்கிற இந்த சாதரா (பொன்னாடை)க்கும் சம்பந்தம் உண்டு. (தொடரும்)

திருச்செங்கோடு காந்தி ஆசிரமம் பொன் விழா காண்கிறது. இச்சந்தர்ப்பத்தில் ஆசிரமத்தின் பணிகள் சிலவற்றைப் புகைப்படங்களாக இங்கு தருகிறோம். பொன்விழா மலரில் இடம் பெற்றுள்ள அருமையான கட்டுரைகளிலிருந்து சில சுவையான பகுதிகளைத் திரட்டித் தருகிறோம். — ஆசிரியர்

திருப்பதியில் உள்ள சில ஹரிஜனங்கள் பொருளாதார ரீதியில் உயர்ந்திருந்தனர். நெசவாளர்களான இவர்களில் சிலரிடம், 'நீங்கள் பெரிய மனிதர்கள் போல் காட்சியளிப்பதால் திருப்பதி மலை ஏறினாலும் யாருக்கும் தெரியாது' என்று சொல்லி வைத்தேன். அந்நாளில் ஹரிஜனங்கள் ஆலயப் பிரவேசம் செய்யக் கூடாது. என் பேச்சைக் கேட்டுச் செயல்பட்ட ஒருவர் அகப்பட்டுக் கொண்டார். அவர்மீது திருப்பதி கோயிலில் நுழைந்ததற்காக வழக்குத் தொடுத்தார்கள். அது சித்தூர் மாஜிஸ்திரேட் முன்னால் விசாரணைக்கு வந்தது.

காந்தி ஆசிரமத்தில் ராஜாஜி இச்செய்தியைப் பத்திரிகைகளில் படித்தார். அந்த ஹரிஜன் மலை ஏறிச் சென்றது என் தூண்டுதலால்தான் என்று அச்சமயம் ஆசிரமத்திலிருந்த நான் ராஜாஜியிடம் சொன்னேன். அவர் உடனே ரயிலேறிப் போய் ஹரிஜனனுக்காக வாதாடி விடுதலை பெற்றுத் தந்தார்.

காந்தி ஆசிரமத்தில் பலர் இதை ஆட்சேபித்தனர். 'ஒத்துழையாமை இயக்கத்தில் சேர்ந்து கோர்ட்டுகளைப் பகிஷ்காரம் செய்த ராஜாஜி, எப்படி ஆங்கிலேய மாஜிஸ்திரேட் முன்பாக வாதாடலாம்?' என்று கேட்டனர்.

ஆனால் விவரம் அறிந்த காந்திஜி, ராஜாஜியின் செயலை ஆமோதித்தார். 'யங் இந்தியா'வில் செய்தியைப் பிரசுரிக்கவும் செய்தார்.

— ஜி. மகாதேவன்



கஸ்தூரிபா திருச்செங்கோடு காந்தி ஆசிரமத்துக்கு வந்தபோது எடுக்கப்பட்ட படம். ராஜாஜி, அவரது புதல்வியர் இருவர், ஆசிரம ஊழியர்கள் ஆகியோரை பாவுடன் காணலாம்.

படம்: உதவி. எம். எஸ். அனந்தராம்

# சேவைகள் தொடரட்டும் காந்தீயம் தழைக்கட்டும்



தொழு நோயாளிகளை மருத்துவ மனையில் டாக்டர் பரிசீலனை செய்கிறார். இது தவிர இதர நோய்களுக்காக சிகிச்சை பெறுவோர் ஓராண்டில் 17,500க்கும் மேல்.

★ ஆசிரமம் ஸ்தாபிக்கப்பட்டது முதலே சாதாரண நோய்களுக்குச் சிகிச்சை செய்யும்



பலவித ராட்டைகள் சுழல்வதன் மூலம் ஆசிரமம் ஆயிரக்கணக்கானோருக்கு ஆறு மாதங்களுக்கு 2.84 லட்சம் கூலியாகத் தருகிறது.

பணி ஆரம்பமாயிற்று. வெகு விரைவில் குஷ்டரோக நிவாரணப் பணிக்கு அவசியம் இருப்பது தெரிந்தது. சுமார் 360 பிணியாளர்கள் இலவசமாக இங்கு சிகிச்சை பெற்று வருகிறார்கள். இவர்களுக்கு விசேஷ ரப்பரால் செய்யப்பட்ட செருப்புக்கள் குறைந்த விலைக்கும் இலவசமாகவும் தரப்படுகின்றன.

— வி. எஸ். தியாகராஜன்

★ காந்தி ஆசிரமத்தில் இருக்கும்போது ராஜாஜி காலை மாலை உலாவச் செல்வார். அப்போது கூட வழியில் தென்படும் முன்பின் அறியாத கிராமவாசிகளிடம் பேசிக் கள்ளினால் ஏற்படும் தீமைகளை விளக்கிச் சொல்வார்.

— விசுவநாதன்

★ பொது சேவையில் ஊக்கமும் உறுதியும் உடல் உழைப்புக்கு அயராமையும் கொண்ட சில தொண்டர்களைச் சேர்த்துக் கொண்டு 1925ல் பணியைத் தொடங்கினார் ராஜாஜி. ஏராளமான கைராட்டைகளை எடுத்துக் கொண்டு அந்த வட்டாரத்தில் உள்ள சிற்றூர்களைச் சுற்றினர். விவசாய குடும்பங்களைச் சேர்ந்த மூதாட்டிகளைத் தேடிப் பிடித்து நூற்கும்படி ஏற்பாடு செய்தார். தாமும் தினசரி நூற்றார். ஆசிரமத்திலுள்ள எல்லோரும் நூற்றனர். நூற்ற நூல்களைப் பக்கத்துக் கிராமங்களின் நெசவாளர்களை அணுகி நெய்வித்துத் துணியாக்குவதிலே முனைந்தார். அத்துணிகளை மூட்டை கட்டிக் கொண்டு தொண்டர்களுடன் ஊர் சுற்றி விற்றார். இதனால் ஆயிரக் கணக்கில் ராட்டினங்களும் நூற்றுக்கணக்கில் தறிகளும் இயங்கின.

— க. கந்தசாமி

காந்தி ஆசிரமம் சோப்பு தயாரிப்புப் பகுதி. ரூ. 8.85 லட்சம் பெறுமானத்துக்குச் சோப்பு உற்பத்தியாகிறது.



★ மாலை ஏழு மணிக்குப் பிரார்த்தனை நடக்கும். ராஜாஜி ஊரில் இல்லாவிட்டால் ஒருவர் மேல் ஒருவர் பல்வேறு கருதிகளில் பாடிப் பழி தீர்த்துக் கொள்வார்கள். ராஜாஜி இருந்தால் பாடக்கூடியவர்களைப் பாடச் சொல்வார். பகவத்கீதை, ராமாயணம் இன்னும் மற்ற அரிய பெரிய விஷயங்கள் குறித்து ஆராய்ச்சிகளும் விவாதங்களும் நடத்துவார். ஒருநாள் ராஜாஜி தாம் எப்போதும் உட்காரும் இடத்தில் அல்லாது வேறு இடத்தில் அமர்ந்து கொண்டார். விளக்குகள் தாழ்த்தப்பட்டதால் பிரார்த்தனைக் கூடம் இருட்டாக இருந்தது. ஸ்ரீ சிவகுருநாதன் ராஜாஜி பக்கத்தில் வந்து உட்கார்ந்தார். சிவகுருநாதனுக்குத் தம் பக்கத்தில் இருப்பது ராமதுரை என்ற நினைப்பு. விளையாட்டு சேஷ்டைகள் மிகுந்தவரான சிவகுருநாதன் ராஜாஜியின் தொடையைப் பிடித்து ஓர் அமுத்து அமுத்தினர். ஆனால் ஒன்றும் நேரவில்லை. பிரார்த்தனை முடிந்து விளக்குகள் பிரகாசித்தன. பக்கத்தில் ராஜாஜியைப் பார்த்த சிவகுருநாதனுக்குத் தூக்கிவாரிப் போட்டது!

— எம். கே. வேங்கடராமன்

★ கதர், மதுவிலக்கு, தீண்டாமை ஒழிப்பு ஆகியவற்றுக்குக் காந்திஜி வகுத்த திட்டத்தை அமுல்படுத்துவதே தங்கள் பணியாக ராஜன் பாபுவும் ராஜாஜியும் மேற்கொண்டனர். அதன் விளைவாக ராஜாஜி திருச்செங்கோடு அருகே புதுப்பாளையத்தில் காந்தி ஆசிரமம் ஆரம்பித்தார். காந்திஜியின் நிர்மாணத் திட்டத்தை வெற்றிகரமாக நடத்திக் காட்டினார். ராஜாஜியின் மகன் திரு வி. ஆர். நரசிம்மன் இன்று இதன் தலைவராக இருந்து தகப்பனார் ஆரம்பித்து வைத்த நற்பணிகளைத் தொடர்ந்து நடத்தி வருகிறார்.

— கே. வேதமூர்த்தி

பொன் விழாவை மிகச்சிறந்த முறையில் கொண்டாட ஏற்பாடாகியிருக்கிறது. பிப்ரவரி 6 7,8,9 ஆகிய தேதிகளில் நாலு நாள் கல்யாணமாக நடக்கிறது. வில்லுப்பாட்டு, நாடகம் முதலிய கலைநிகழ்ச்சிகள், நூற்போர் நெய்வோரைக் கௌரவித்தல், பேச்சுப் போட்டி, புதிய திட்டங்களின் அங்குரார்ப்பணம் ஆகியவை இடம் பெறும் பொன்விழாவில் திரு காமராஜ் அவர்கள் கலந்து கொள்கிறார். கடைசி நாளன்று மாலை ஸ்ரீமதி எம். எஸ். சுப்புலக்ஷ்மி அவர்கள் ராஜாஜிக்கு இசையஞ்சலி செலுத்துகிறார்.

நெசவாளர்களுக்குக் கூலி: ஏராண்டில் ஒன்றரை லட்சம் ரூபாய் கூலி பட்டுவாடா ஆகிறது. தவிர நெசவாளர்களுக்கு வேறு பல சலுகைகளும் உண்டு.



# இந்தியாவிலும். அயல்நாடுகளிலும் இப்பொழுது அதிகமான அளவில் தேவைப்படுகிறது இந்த தேங்காய் நார்



Ennor

இயந்திரங்கள்—
தேங்காய் நார்
தயாரிக்க.



Crusher

adsindia

# குறைந்த முதலீட்டில் சிறந்த முறையில் தேங்காய் நார் தயாரிக்க இயந்திரங்கள் இதோ!

தேங்காய் நார் தயாரிக்க இந்தியாவில் இதுவரை சரியான இயந்திரங்கள் இல்லாமல் இருந்தது. அதிக அளவு உற்பத்தி செய்து ஏற்றுமதி செய்ய முடியாமல் இருந்தது.

இப்பொழுது இதற்குத் தேவையான எல்லா இயந்திரங்களையும் நாங்கள் தயாரித்துள்ளோம். இதன் மூலம் நீங்கள் குறுகிய காலத்தில் அதிக அளவு தேங்காய் நார் உற்பத்தி செய்யலாம். அதிக அளவு ஏற்றுமதியின் மூலம் அதிக வருவாய் தேடிக் கொள்ளலாம்... உங்களுக்கும் உங்கள் தேசத்திற்கும்!

இதுவரை தென் இந்தியாவில் 12 இடங்களில் எங்கள் என்னுர் இயந்திரங்கள் நல்ல முறையில் செயல்பட்டுக் கொண்டிருக்கின்றன

மற்ற விபரங்களுக்கும் சரியான ஆலோசனைக்கும் எங்களை அணுகுக:

Manufacturers:
**BHARAT MOTORS**
5, Greames Road, Madras-600006
Phone: 86204 Cable: FIBRO-FLEX



Turbo Cleaner



Defibering Machine



Revolving Screener



Fibre Baling Press

# மணத்திலே கரைந்து...

ஸரோஜா ராமமூர்த்தி

அவளை அந்த நிறப் புடவையில் பார்ப்ப தற்குத்தான் அவனுக்குப் பிடித்திருந்தது. வெளிர் நீல நிறப் புடவை, அதே கலரில் ரவிக்கை, வளையல்கள், பொட்டு, புஷ்பம் எல்லாமே. எல்லோரையும் போல அவள் கூந்தலை இழைய வாரிக்கொள்வதில்லை; பின்னிக்கொள்வதில்லை. கழுத்துப் பிடரிக்குக் கீழ் கொஞ்சம்தான் கூந்தல் வளர்ந்திருந்தது. ஸ்பிரிங் கற்றைகள் போல் நெளி நெளியாக இருந்த அதை அவள் வெளிர் நீல ரிப்பனால் முடித்திருந்தாள்.

காலையில் 9.05 மின் வண்டியில் தவறாமல் அவளை அவன் பார்த்து வருகிறான். பெரிய இடத்துப் பெண்ணாக இருக்க வேண்டும். அளவோடு பேசி, அடக்கமாக அவள் சிரிப்பது அவனுக்குப் பிடித்திருந்தது. அவளும் அவனை ஒருவேளை கவனித்திருக்கலாம். ஒருநாளைப் போல் விரல் இடுக்கில் சிகரெட்டும் கையுமாக வெளிர் நீல ஷர்ட்டும், பேண்டும் அணிந்து கொண்டு பெண்கள் பெட்டிக்கு எதிராக நிற்பவன் அவள் பார்வையிலிருந்து தப்ப முடியாது. அவனைக் கண்டதும் அவள் ஒரு விதப் புன்னகையுடன் நெற்றியில் விழும் குழற் கற்றையை ஒதுக்கியவாறு வெளியே சாலையில் தெரியும் மரத்தைப் பார்ப்பாள்.

அதற்குள் ரயில் கிளம்பிவிடும். அவன் அவளைத் தொடர்ந்து செல்வதில்லை.

அவன் காலை நேரங்களில் சரியாக ஒன்பது மணிக்கு அவசரமாகப் பிளாட்பாரத்துக்குள் நுழைவான். அவளைக் கடந்து அவன் போகும் போது வீசும் அந்த மணம்? சந்தன வாசனை? ஓ! அவன் சந்தனப் பவுடர்தான் பூசுவான் போலும்! ஜாதி மல்லிகை சூடிக்கொள்வாள்.

ஒரு விநாடி அவள் உள்ளம் கிறங்கிப் போகும். இந்த வாசனையைக் காலம் கால மாக நுகர்ந்த நினைவுகள் அவள் உள்ளத்தில் கிளர்ந்தெழும். அதற்குள் 9.05 ரயில் வந்து விடும். அவள் அதில் ஏறி ஜன்னல் ஓரத்தில் உட்கார்ந்து வெளியே தெரியும் மரத்தில் தொற்றிக் கொண்டு கிசுகிசுக்கும் குருவிகளை வேடிக்கை பார்க்க ஆரம்பிப்பாள். ரயில் புறப்பட்டுப் போன பிறகு அவனுக்கு உல கமே வெறுமையாகத் தோற்றம் அளிக்கும்.

மறுபடியும் மாலை நேரத்தில் 18.22 ரயிலில் தான் அவள் திரும்புகிற வழக்கம். நாள் முழுதும் வேலை செய்து களைத்த தோற்றமே அவளிடம் இருப்பதில்லை. காலையில் சூடிக் கொண்டிருந்த மலர்கள் உலர்ந்து சருகாகத் தொங்காமல் புத்தம் புதிய மலர்கள் அவள் கூந்தலை அலங்கரிக்கும்.

திரும்பவும் அதே சந்தன வாசனை. மலர்களின் மணம். சில சமயங்களில் அவளுடன் இன்னொரு பெண்ணும் பேசிக் கொண்டு வரு வாள். நல்ல கறுப்பு அவள். கண்களுக்குப் பட்டையாக மை தீட்டியிருப்பாள். பெரிய பெரிய பூப்போட்ட புடவை கட்டிக்கொண்டு கைப் பையை வீசியபடி ஒய்யாரமாக அவள் நடந்து வரும்போது இவள் குத்துவிளக்கு போல் குளுமையாக, அளவோடு சிரித்துப் பேசியபடியே வருவாள்.

'பெண்களில்தான் எத்தனை வகை?' என்று நினைத்துக் கொள்வான் அவன். ஒரு நாள் மாலை இவர்கள் அவனைக் கடந்து போகும் போது அந்தக் கறுப்புப் பெண் உரக்க இவ னைப் பார்த்து, 'ரோமியோ' என்று கத்தி

விட்டுப் போனாள். அவள் இவனைப் பரிதாபமாகத் திரும்பிப் பார்த்துப் 'பேசாமல் வாயேன்' என்றபடி முன்னாடி நடந்தாள்.

பரிதாபப்படும் அந்தக் கண்களில் நீர் பளபளவென்று மின்னுவதைக் கவனித்தான். இன்னும் ஏதாவது அந்தக் கறுப்புப் பெண் சொல்லியிருந்தால் அவள் அழுதிருப்பாளோ என்று நினைத்துப் பார்த்தான். அப்படி அழுதிருந்தால் அந்த முகம் தாமரை மலர் போல் சிவந்து வாடிக் கூம்பிப்போகுமே என்றும் நினைத்தான்.

இப்போதெல்லாம் அவனுக்குச் சிகரெட் புகைப்பது பிடிப்பதில்லை. காற்றில் வீசும் அந்தச் சந்தன மணத்தை மூழ்கடித்தபடி இந்தப் புகை புகையிலை வாடையைக் கும்பென்று வீசியது. அப்படியே அந்த மணத்தில் கரைந்து....

மனத்துக்கு ரம்மியமான, இதமான, கவிதை போன்ற வாசனையை, ஒரு பேயைப் போல் இந்த 'நிகோடின்' மணம் துரத்தி விடுவதாக நினைத்தான். ஆனால், புகைப்பவர்களால் அவ்வளவு சடுதியில் அதை விட முடிவதில்லையே. அதற்காக மிட்டாய்கள், அது இது என்று வாயில் எதையாவது குதப்பியபடி அவன் அங்கு நின்றிருப்பான்.

9.05 மின் வண்டி வந்து நின்றதும் அவன் கண்கள் பிளாட்பாரத்தைத் துழாவின. அவளைக் காணோம். கறுப்புப் பெண் மாத்திரம் வந்து கொண்டிருந்தாள். அன்று ஏதோ ஒரு துணிச்சலில் அவன் வீட்டில் மலர்ந்த நித்திய மல்லிகையைச் சரமாகக் கட்டிக் கொண்டு வந்திருந்தான். அவனுக்கு மல்லிகையைத் தொடுக்கத் தெரியாது. இதற்காகக் காலையிலிருந்து அவன் தங்கையுடன் மல்லுக்கு நின்று அவளுக்கு இரண்டு ரூபாய் இனாம் கொடுத்துப் பூத் தொடுக்க வைத்திருந்தான்.

''யாருக்கண்ணா இது?'' என்று கேட்டாள்.






''யாருக்கோ?''

''சொல்லண்ணா...''

''அம்பாளுக்கு...''

''உனக்கு எப்போ பக்தி வந்தது அண்ணா?'' என்று வியந்தாள் தங்கை.

அம்மா இவனைப் பார்த்துச் சிரித்துவிட்டுப் பூஜை உள்ளுக்குக் கோலம் போடப் போனாள்.

''சொல்லேன். நிஜத்தைச் சொல்லேன்.''

''அவன்தான் சொல்றானே. அம்பாளுக்குத்தான் இருக்கும். அவனுக்கு நல்ல புத்தி வரணும்னு, பக்திமானா ஆகணும்னு நான் தினமும் அபிராமியை வேண்டிக் கொண்டிருக்கேன்.'' அம்மா இருதய கமலம் அழகாகப் போட்டுச் செம்மண் தீற்றிக் கொண்டிருந்தாள்.

''கொஞ்சம் ஓர் இணுக்குக் கிள்ளி வைச்சி கட்டுப் போடா. படத்துக்குப் போடணும்.''

''நாளையிலேருந்து போடு. நான் இன்னிக்கு முழுதும் எடுத்துண்டு போறேன்—''

''சரி, எல்லாம் அம்பாள்தான்'' என்று திருப்திப்பட்டுக் கொண்டாள் அம்மா.

கறுப்புப் பெண் இவனைக் கடக்கும்போது 'மிஸ்' என்று வாய்வரையில் வந்த சொல்லை மென்று விழுங்கியபடி அவளைப் பார்த்தான். அவள் கர்வத்தோடு நடந்து சென்று வண்டியில் ஏறும்போது பிளாட்பாரத்தின் கோடியில் இவன் வந்து கொண்டிருந்தான். வண்டி போய்விட்டது. நெற்றியில் வியர்வை பொடித்திருந்தது. இன்று சந்தன வண்ணப் புடவை கட்டியிருந்தாள். முகம் வாடிப் போயிருந்தது. வீட்டிலே ஏதாவது வேலை இருந்திருக்கும். அம்மாவுடன் வாக்குவாதம் வந்திருக்கும். தம்பி, தங்கைகள், ரிடையர்டு ஆன அப்பா இவர்களைச் சமாளித்துக் குடும்ப பாரத்தைச் சுமப்பவளாக இருக்கலாம்.

பாவிகள்! ஏன் இப்படி அவிச்ச மலரைப் போன்றவளை வேலைக்கு அனுப்புகிறார்களோ? அழகாகக் கல்யாணம் பண்ணி வைக்கக் கூடாதோ!

அவன் குறுக்கும் நெடுக்குமாக உலவினான். ஜேபியில் இருந்த மல்லிகைச் சரம் மணத்துக் கொண்டேயிருந்தது. குட்டைத் தலை முடியில் இன்று மலர் இல்லை. ''இந்தா இதை வைக்கக்கோ!'' என்று கொடுத்துவிட முடியுமா?

கொடுத்தால்? அவள் சிரிப்பாள், உடனே வாங்கித் தலையில் சூடிக் கொள்வாள். இல்லை, இல்லை. அவனை விழித்துப் பார்த்து ''யூ! ராஸ்கல்!'' என்று சத்தம் போடுவாள்.

''அம்பிகே!'' என்று நினைவு தெரிந்த நாட்களாய் நினைக்காத ஒருத்தியைச் சலிப்புடன் அழைத்தான். ரயில் வந்தது. ஏறி அமர்ந்தான். அம்பிகையைப்பற்றி அம்மா அடிக்கடி சொல்லுவாள். ''நான் சமீபத்திலே திருக்கடையூருக்குப் போயிருந்தேன். அம்பாளைப் பார்த்தப்போ அவள் தீவிரமாகச் சிந்தனை செய்வது போல் இருந்தது. ஞானத்தின் ஒளி வீசிக் கொண்டிருந்தது.''

''போடி போ. நான் பல தடவை திருக்கடையூர் போயிருக்கேன். அபிராமி சிரித்தபடி இருக்கிறாள்...'' அப்பா எதிர்க் கணை தொடுப்பார்.

இவள் முகத்திலே வீசுவது ஞானமா? நகையா?

ரயில் கிளம்பியதும் பூச்சரத்தை வெளியே எடுத்தான். குப்பென்று மணம் வீசியது. சலிப்புடன் வீட்டுக்குத் திரும்பியவன் எதிரில் கிராம தேவதை கோயில் தென்பட்டது. சன்னிதி சாத்தியிருந்தது. நட்டிருந்த சூலத்தின் மீது சரத்தைப் போட்டுவிட்டு நடந்தான்.

மாலை 18.22 ரயிலில் அவளும், கறுப்புப் பெண்ணும் வந்தார்கள். இருவரும் அந்தரங்கமாக ஏதோ பேசியபடி வந்தார்கள். கறுப்புப் பெண் ஏதோ சொல்ல இவள் நாணித் தலை குனிந்து நடந்தாள்.

இடையில் இரண்டு நாட்கள் விடாமல் மழை பெய்தது. இவனுக்கு நல்ல குளிர் காய்ச்சல். 9.05 ரயில் வருவதைக் கற்பனையில் பார்த்தபடி படுக்கையில் கிடந்தான். வெளிர் நீலப் புடவையில் அவளைக் கண்டான். திடீரென்று படுக்கையிலிருந்து துள்ளி எழுந்தான்.

''எங்கேடா?'' என்று கேட்டபடி அம்மா கஞ்சியை ஆற்றிக் கொண்டே வந்தாள்.

''சும்மா இப்படி—''

''நன்னாயிருக்கு. இன்னும் ஜுரம் விடவில்லை. இந்தக் காத்துலே மழையிலே சும்மா இப்படி!''

''கஞ்சியை வைச்சுட்டுப் போ!'' என்று இரைந்தான் அவன்.

அம்மா பயந்தபடி வெளியே போய் விட்டாள்.

பதினைந்து நாட்களுக்கப்புறம் ஜுரம் விட்டது. மேஜை டிராயரைத் திறந்து சிகரெட்டை எடுத்துப் பற்ற வைத்தான்.

ஆனால், அது சந்தன மணம் வீசியது.

இவனுக்கு ஜுரம் விட்ட பிறகு கூட மழை விடவில்லை. 'ஆகாயத்திலே இவ்வளவு ஜலத்தை எப்படி 'ஸ்டோர்' பண்ணினோ?' என்று குழந்தைத்தனமாக மனம் கேட்டது.

அறையைப் பெருக்க வந்த அம்மா, ''ஏண்டா இப்படிச் சிகரெட் குடிக்கறே? உடம்பு என்னத்துக்காகும்?'' என்று ஆதங்கப்பட்டாள்.

''உடம்பைப் பத்தி இப்ப யார் கவலைப் படறா?''

''அடடா! பெரிய ஞானக் கொழுந்தா மாறிண்டு வரயே...'' என்று ஆச்சரியப்பட்டாள் அம்மா. பிறகு நீளமான கவர் ஒன்றைக் கொண்டு வந்து ''உனக்கு அம்பாளிடம் பக்தி வந்தவுடனேயே வேலை கெடச்சுது பார். காசியிலே சர்வகலாசாலையிலே உன்னைப் புரபொஸரா எடுத்துண்டு இருக்காளாம். நேத்திக்கே இந்தக் கவர் வந்தது. உனக்கு நல்ல ஜுரம் இருந்தது. அதனாலே காண்பிக்கலை'' என்றபடி அவனிடம் கொடுத்தாள். அவன் அதை மேஜையின் மீது வீசி எறிந்தான். மழைக் கோட்டை மாட்டிக் கொண்டு வாசலுக்கு வந்தான்.

''ஏண்டா மழையிலே போறே? எங்கேடா?'' என்று அப்பா கேட்டார்.

அவன் அவரைத் தீர்க்கமாகத் திரும்பிப் பார்த்தான். ''சுடுகாட்டுக்கு'' என்று மழையின் இரைச்சலையும் மீறிக் கத்தியபடியே நடந்தான்.

பிளாட்பாரத்தில் 9.05 ரயில் வந்து நின்றது. அவளுடன் கறுப்புப் பெண்ணும் இன்னொருவனும் நின்றிருந்தார்கள். பெட்டிகள், படுக்கை, தகர டப்பாக்கள், எல்லாம் அவளுடன் வண்டியில் ஏற்றப்பட்டன. அவளும் அவனும் வண்டியில் ஏறினார்கள். அவள் கழுத்தில் மஞ்சள் சரடு மின்னியது. மலர் போன்ற பாதங்களின் விரல்களில் மெட்டிகள் குலுங்கின. கறுப்புப் பெண் கண்ணீர் வழிய அவளுக்கு விடை கொடுத்தாள்.

அவனுக்குச் சட்டென்று தன் வீட்டில் மேஜையின் மீது வீசியெறியப்பட்ட கவர் நினைவுக்கு வந்தது. சிகரெட் ஒன்றை எடுத்துப் பற்றவைத்துச் சுவைத்துப் புகைத்தான். அதில் சந்தன மணம் வீசவில்லை. நிகோடின் மணத்தது!

# சிவகாமியின் சபதம்

அமரர் கல்கி

## 42-ம் அத்தியாயம்

## பிக்ஷுவின் காதல்

புலிகேசியின் உள்ளத்தில் அசூயை என்னும் பாம்பு படமெடுத்து ஆடுவதை அறியாதவராய் நாகநந்தி பிக்ஷு தமது இருதயத்தைத் திறந்து சொல்லத் தொடங்கினார்:

"தம்பி! குழந்தைப் பிராயம் முதற் கொண்டு, — எனக்கு அறிவு தெளிந்த நாளிலிருந்து, — நான் அஜந்தா மலைக் குகைகளில் வளர்ந்து வந்தேன். அஜாந்தா சங்கராமத்தில் பிக்ஷுக்களும் அவர்களுடைய சிஷ்யர்களும் இருந்தார்கள். என் இருபதாவது பிராயம் வரையில் உயிருள்ள பெண்ணை நான் பார்த்ததில்லை. அதாவது, சதை, இரத்தம், எலும்பு, நகம் ஆகியவற்றால் ஆன மானிடப் பெண்ணைப் பார்த்ததில்லை. ஆனால், ஜீவனுள்ள பெண்களைப் பார்த்திருக்கிறேன். ஒருவனுடைய இருதய அந்தரங்கம் வரைக்கும் சென்று ஊடுருவிப் பார்க்கும் சக்தி வாய்ந்த விசால நயனங்களுடைய பெண்களைப் பார்த்திருக்கிறேன். மானிடக் குலத்துக்கு எட்டாத தெய்விக சௌந்தரியம் வாய்ந்த மடமங்கையர்களைப் பார்த்திருக்கிறேன். அழகுக்கு அழகு செய்யும் திவ்விய ஆபரணங்களை அணிந்த அணங்குகளைப் பார்த்திருக்கிறேன். தங்கள் கூந்தலில் மலர் அணிந்ததனால் அம் மலருக்கு அழகைத் தந்த பெண்களைப் பார்த்திருக்கிறேன். சாந்தம் குடி கொண்ட பெண்களையும், கருணை வடிவான பெண்களையும் மினுக்கி மயக்கும் மோகினி ரூபம் கொண்ட மாயப் பெண்களையும் பார்த்திருக்கிறேன். இவர்களை யெல்லாம் அஜந்தா விஹாரங்களில் உள்ள சுவர்களிலே பார்த்தேன். மகா சைத்திரிகர்களான பிக்ஷுக்கள் தீட்டிய அற்புத சித்திரவடிவங்களைப் பார்த்தேன். அந்தச் சித்திர வடிவங்கள் எல்லாம் என்னைப் பொறுத்த வரையில் உயிர் உள்ள ஸ்திரீ புருஷர்கள்தான். நான் அவர்கள் அருகில் சென்றதும் என்னை அவர்கள் வரவேற்பார்கள்; முகமன் கூறுவார்கள்; க்ஷேமம் விசாரிப்பார்கள். அவர்களிடம் நானும்

மனம் விட்டுப் பேசுவேன்; அவர்களுடைய க்ஷேமலாபங்களை விசாரிப்பேன்; வெளி உலகத்து விஷயங்களைப் பற்றியெல்லாம் அவர்களிடம் கேட்பேன். மௌன பாஷையில் அவர்கள் மறுமொழி சொல்வார்கள்.

"இப்படி நான் தினந்தோறும் பார்த்துப் பேசிப் பழகிய சித்திர வடிவங்களுக்குள்ளே முக்கியமாக ஒரு பெண்ணின் வடிவம் என் சிந்தையைக் கவர்ந்திருந்தது. அவளுடைய பொன்னிற மேனியின் சோபையை அவள் இடையில் உடுத்தியிருந்த நீல நிறப் பட்டாடையும், மாந்தளிர் நிறத்து உத்தரீயமும் அதிகமாக்கிக் காட்டின. புன்னகை பூத்த அவளுடைய இதழ்களின் செந்நிறமும், அவளுடைய கருங் கூந்தலில் சூடியிருந்த செவ்வாம்பல் மலரின் சிவப்பு நிறமும் ஒன்றை ஒன்று தூக்கியடித்தன. தாமரை இதழ்போல் வடிவம் அமைந்த அவளுடைய கண்களின் கரு விழிகள் என் இருதயத்தை ஊடுருவி நோக்கியபோது என் இருதயத்தில் நான் இதுகாறும் அறிந்திராத வேதனையும் இன்பமும் உண்டாயின. அந்தச் சித்திர உருவம் தீட்டப்பட்டிருந்த விஹாரத்தில் எந்தப் பக்கத்தில், எந்த மூலையில் நின்று பார்த்தாலும், அந்தப் பத்மலோசனியின் கண்கள் என்னையே நோக்குவதுபோல் இருந்தன. அவ்வளவு அற்புத வேலைத் திறமையுடன் யாரோ ஒரு சைத்திரிகப் பிரும்மா அவ் வுருவத்தைத் தீட்டி யிருந்தார். அந்தச் சித்திரத்தை வரைந்து முந்நூறு வருஷங்களுக்கு மேல் ஆகியிருந்த போதிலும் வர்ணங்கள் சிறிதும் மங்காமல் நேற்று எழுதியவைபோல் விளங்கின.

"அந்தச் சித்திரப் பெண்ணின் உருவத்தில் இன்னொரு விசேஷம் இருந்தது; அவள் இடை வளைந்து நின்ற நிலையும், அவளுடைய கரங்களும் கழுத்தும் அமைந்திருந்த தோற்றத்தில் காணப்பட்ட நெளிவும், அவள் ஏதோ ஒரு விசித்திரமான காரியத்தில் ஈடுபட்டிருக்கிறாள் என்பதைப் புலப்படுத்தின. ஆனால் அவள் என்ன செய்து கொண்டிருக்கிறாள் என்பது எனக்குப் புலப்படவில்லை. என் மனத்துக்குள் எவ்வளவோ யோசனை செய்தும் அதை என்னால் அறிய முடியவில்லை. கடைசியில் சைத்திரிக பிக்ஷு ஒருவரைக் கேட்டேன். அவர் 'அந்தப் பெண் பரத நாட்டியம் ஆடுகிறாள்' என்று சொன்னார். பிறகு பரதநாட்டியம் என்றால் என்னவென்று தெரிந்து கொள்ள விரும்பினேன்.



பரத சாஸ்திரம் என்னும் ஒரு நூல் இருப்பதாகத் தெரிந்து கொண்டு அந்த நூலைச் சம்பாதித்துப் படித்தேன். பரத நாட்டியக் கலையின் பல அம்சங் களையும் நன்கு தெரிந்து கொண்டேன்.

இதற்குப் பிறகு, அந்த ஓவியக் கன்னி என் உள்ளக் காட்சியில் பரத நாட்டியம் ஆடத் தொடங்கினாள். பரத நாட்டியக் கலைக்குரிய பலவிதத் தோற் றங்களிலும் அவள் காட்சி அளித் தாள். பற்பல முத்திரைகள், ஹஸ் தங்கள், பலவித அபிநயத் தோற்றங்கள் என் அகக் கற்பனையில் தோன்றிக் கொண்டேயிருந்தன. பகலிலும் இரவி லும் சதா சர்வ காலமும் அந்தக் கற் பனைப் பெண் என் உள்ளத்தைக் கொள்ளை கொண்டிருந்தாள். அப் போதுதான் எனக்கு முதன் முதலில் வெளி உலகத்துக்குப் போக வேண்டும், நாடு நகரங்களில் வாழும் ஸ்திரீபுருஷர் களைப் பார்க்க வேண்டும் என்ற ஆசை உண்டாயிற்று. ஒருவேளை அந்த மாதிரி உண்மையாகவே ஒரு பெண் எங்கேனும் இருக்கலாம் அல்லவா என்ற சபலம்



ஏற்பட்டது. இந்த ஆசை காரண மாகவே அஜந்தா நதி வழியைப் பிடித்துக் கொண்டு வெளியே வந்து மலையடி வாரத்துக் கானகங்களிலே நான் சுற்ற ஆரம்பித்தேன். அப்போதுதான் தம்பி, ஒரு நாள் உன்னைப் பார்த்தேன். பேச்சு மூச்சற்றுக் கிடந்த உன் உடம்பில் பிராணனை ஊட்டினேன். அது முதல் என் மனப் போக்கில் ஒரு மாறுதல் உண்டாயிற்று. சித்திரத்தில் பார்த்துக் கற்பனையில் நான் வளர்த்து வந்த பெண் சிறிது சிறிதாக என் உள்ளத்திலிருந்து மறையலானாள். அவள் இருந்த இடத்தில் நீ வந்து சேர்ந்தாய். நீ என் சொந்த உடன் பிறந்த சகோதரன், என்னுடன் இரத்தத் தொடர்புடையவன் என்பதை அறிந்த பிறகு என்



இருதயத்தில் அந்தச் சித்திரநாட்டியக் காரிக்குச் சிறிதும் இடமில்லாமற் போய்விட்டது.

"தம்பி! சிறிது காலத்துக்கெல்லாம் நீயும் நானும் அஜந்தா மலைக் குகையை விட்டு வெளியேறினோம். நீ வாதாபிச் சிம்மாசனம் ஏறினாய். நீயும் நானுமாக எத்தனையோ யுத்தங்கள் நடத்தி ஜயித்தோம். எத்தனையோ இராஜதந்திரங்களையும் இராணுவ தந்திரங்களையும் கையாண்டு வெற்றி பெற்றோம். துங்கபத்திரையிலிருந்து நர்மதை நதிவரையில் சளுக்க சாம்ராஜ்யம் படர்ந்து தழைத்தது. உத்தராபத ஹர்ஷவர்த்தன சக்கரவர்த்தியும் வராகக் கொடியைக் கண்டு அஞ்சலானார்.

"இந்த நாட்களில் நான் ஏற்றுக் கொண்டிருந்த பிக்ஷு விரதத்தை நிறைவேற்றுவது எனக்குக் கொஞ்சமும் கஷ்டமாயில்லை. வாதாபி நகரத்திலும், மற்றும் நான் யாத்திரை செய்த பட்டணங்களிலும் கிராமங்களிலும் எத்தனையோ ஸ்திரீகளை நான் பார்த்தேன். அஜந்தா குகைச் சுவர்களில் நான் பார்த்த சித்திரப் பெண் வடிவங்களோடு ஒப்பிடும்போது, இந்த மானிடப் பெண்கள் அழகற்ற அவலட்சண வடிவங்களாகவே தோன்றினார்கள். அந்தச் சித்திரப் பெண்களைப் பார்த்து, அவர்களுடைய அழகை வியந்த கண்களினால் இந்தச் சாதாரண மானிட ஸ்திரீகளைப் பார்க்கவே முடியவில்லை.

"உலகத்திலே மனிதர்கள் என்னத்திற்காக ஸ்திரீகள் மீது மோகங் கொண்டு பைத்தியம் பிடித்து அலைகிறார்கள் என்று வியந்தேன். தம்பி! ஒருவர் பின் ஒருவராக நீ ஆறு பெண்களை மணந்தபோது உன்னுடைய பரிதாப நிலையைக் குறித்து இரங்கினேன்!"

இத்தனை நேரம் மௌனமாக இருந்து கேட்டுக் கொண்டிருந்த புலிகேசி இப்போது குறுக்கிட்டுக் கூறினார்:

"ஆம், அண்ணா! அதையெல்லாம் நினைத்தால் ஏன் அந்தப் பைத்தியக் காரத்தனங்களில் இறங்கினோம் என்று எனக்கும் ஆச்சரியமாகத்தான் இருக்கிறது. என்ன செய்யலாம்? எங்களுக்கெல்லாம் அனுபவித்த பிறகுதான் புத்தி வருகிறது. நீயோ பெண் மோகம் என்பது எவ்வளவு அசட்டுத்தனம் என்பதை முன்னதாகவே கண்டு கொண்டு விட்டாய்!"

புலிகேசிச் சக்கரவர்த்தி இவ்விதம் கூறியபோது அவருடைய தொனியில் சிறிது பரிகாசம் கலந்திருந்ததாகத் தோன்றியது. ஆனால், அறிவுக் கூர்மை மிகப் படைத்த பிக்ஷுவுக்கு அச்சமயம் அது தெரியவில்லை. அவர் மேலும் கூறினார்:

"இல்லை, தம்பி, இல்லை! உன்னுடைய புகழ்ச்சிக்கு நான் அருகனல்ல. நீங்கள் எல்லாரும் பட்டு அநுபவித்த பிறகு உண்மையைக் கண்டு கொண்டீர்கள். ஆனால், நானோ எத்தனையோ காலம் துறவறத்தை அநுஷ்டித்த பிறகு, யௌவனப் பிராயத்தையெல்லாம் இழந்து விட்ட பிறகு, ஒரு பெண்ணின் காதலுக்கு வயமானேன். ஆனால், என்னுடைய காதல் மற்ற உலக மாந்தரின் காதலை ஒத்ததன்று. அதைப் பற்றிச் சொல்வதற்கு முன்னால் நான் காதல் வயப்பட்ட வரலாற்றைச் சொல்லிவிட வேண்டும்.

"வடக்கே ஹர்ஷ மகா சக்கரவர்த்தியுடன் நாம் ஓர் உடன்படிக்கைக்கு வந்து நர்மதைக்குத் தெற்கே அவருடைய சைனியங்கள் வருவதில்லை என்று வாக்குறுதி பெற்ற பிறகு, தென்னாட்டுப் படையெடுப்புக்கு முன் ஆயத்தம் செய்

# நேற்றுவரை குழந்தைகளுக்குக் கிட்டாதது

# இன்று உங்கள் குழந்தைக்கு—

# புதிய டெண்டெர் கேர்




## பேபி பவுடர் மென்மையான சருமத்திற்கென சரியாக பஃப்பர் செய்யப்பட்டது

உங்கள் குழந்தைக்கு அன்பும், ஆதரவும்— டெண்டெர் கேர்!

மென்மையான சருமத்திற்கென சரியாக பஃப்பர் செய்யப்பட்டது. உங்கள் அன்பும், ஆதரவும்தான் உங்கள் குழந்தைக்குக் கிட்டும் பெரும் பேறு. எதிலுமே மிகச் சிறந்தவற்றைத்தானே உங்கள் குழந்தைக்குத்தருகிறீர்கள்.

இதோ, உங்கள் அன்புக்கு ஒரு புதிய சின்னம்— டெண்டெர் கேர். புதிய பேபி பவுடர் இன்றைய விஞ்ஞான வளர்ச்சி தரும் பரிசு. நேற்று வரை வந்த பஃப்பர் செய்யப்படாத பவுடர்கள் குழந்தையின் மேனியைப் புண்படுத்தக் கூடும். ஆனால் புதிய டெண்டெர் கேர் சரியாக பஃப்பர் செய்யப் பட்டது. குழந்தையின் சருமம் சிவந்து போய் சில நேரங்களில் லேசாக புண்படுவது கூட உண்டல்லவா? இதெல்லாம் நேராமல் உங்கள் குழந்தையை டெண்டெர் கேர் பாதுகாக்கிறது. அதன் நிகரற்ற வியர்வை உறிஞ்சும் சக்தி உங்கள் குழந்தையை எப்போதும் வசதியாக, மகிழ்ச்சியுடன் இருக்கச் செய்கிறது.

பட்டுப் போன்ற டால்க், மிதமான நறு மணம்— எல்லாமே அதில் கவனமாக சேர்க்கப் பட்டுள்ளன. உங்கள் குழந்தைக்காக. அதை 'டெண்டெர் கேர்' என்று அழைப்பதே அதனால்தானே.

CTC.G.I.TM

# அருள்மிகு தண்டாயுதபாணி சுவாமி திருக்கோவில்

**பழனி - 624601**

## வேண்டுகோள்

இத்திருக்கோவில் திருமலை யானைப்பாதையில் கல் தளவரிசை ரூ.2,00,000/- மதிப்பீட்டில் அமைத்திட உத்தேசிக்கப்பட்டுள்ளது. அதற்கென சுமார் 10 அடி நீளம் கருங்கல் தளவரிசை (சுமார் 160 சதுர அடி) போட ரூ. 750/- செலவாகும். உபயமாய் செய்ய விரும்பும் சேவார்த்திகள் போட வேண்டிய அளவுக்குத் தக்கவாறு உபயத் தொகையினை ''துணை ஆணையர் - நிர்வாக அதிகாரி, அருள்மிகு தண்டாயுதபாணி சுவாமி திருக்கோவில், பழனி'' என்ற முகவரிக்கு அனுப்பி வைக்கும்படி கேட்டுக் கொள்ளப்படுகிறார்கள். உபயதாரர் பெயர் பக்கச் சுவற்றில் பொறிக்கப்படும் என்றும் தெரிவித்துக் கொள்ளப்படுகிறது.

திருப்பணி உபயத் தொகைகளுக்கு மத்திய அரசு உத்திரவுப்படி வரி விதி விலக்குண்டு என்பதையும் தெரிவித்துக் கொள்கிறேன்.

**துணை ஆணையர் - நிர்வாக அதிகாரி**

---

வதற்காகச் சென்றேன். தென்னாடெங்கும் பௌத்த மடங்களும் ஜைன மடங்களும் ஏராளமாக இருந்தபடியால் என்னுடைய வேலை மிகவும் சுலபமாக இருந்தது. காஞ்சி இராஜ விஹாரத்திலே கூட நமக்காக வேலை செய்யும் பிக்ஷுக்கள் கிடைத்தார்கள். பிறகு தான், உனக்குச் சைனியத்துடன் கிளம்பும்படி ஓலை அனுப்பினேன். அனுப்பி விட்டு நான் மதுரைக்குப் பிரயாணப் படுவதற்கு முன்னால் என் வாழ்க்கையிலேயே முக்கியமான சம்பவம் நிகழ்ந்து விட்டது.

''தம்பி! சளுக்க சாம்ராஜ்யத்தின் விஸ்தரிப்புக்கான வேலைகளில் நான் பூரணமாய் ஈடுபட்டிருந்த போதிலும், இடையிடையே சிற்ப சித்திரக் கலைகளில் என் மனம் செல்லாமல் தடுக்க முடியவில்லை. காஞ்சியில் சில அற்புதமான சிற்பங்களைப் பார்த்தேன். மாமல்லபுரம் என்று புதிதாகப் பெயர் பெற்ற துறைமுகத்துக்கு அருகில் சில அதிசயமான சிற்ப வேலைகள் நடைபெறுவதாகக் கேள்விப்பட்டேன். மதுரைக்குப் போகு முன் அவற்றைப் பார்க்க வேண்டும் என்று சென்றேன். மாமல்லபுரத்துச் சிற்பங்கள் உண்மையில் அதிசயமாகவே இருந்தன. அந்த வேலைகளை நடத்தி வைக்கும் பெரிய சிற்பி ஒருவர் அரண்யத்தின் நடுவில் வீடு கட்டிக் கொண்டு வசிப்பதாகக் கேள்விப்பட்டேன். அவரைப் பார்க்க வேண்டுமென்று விரும்பி அவருடைய சிற்ப வீட்டைத் தேடிக் கொண்டு போனேன்.

''அந்த மகா சிற்பியின் வீட்டில் பல அற்புதங்களைக் கண்டேன். முக்கியமாக ஆயனர் அப்போது செய்வதில் ஈடுபட்டிருந்த நடனச் சிலைகள் என் மனத்தைப் பெரிதும் கவர்ந்தன. அஜந்தாவின் புத்த விஹாரத்தின் சுவர்களில் நான் பார்த்த நடனப் பெண்ணின் உருவத்தை அவை எனக்கு நினைவூட்டின. அந்த நடனச் சிலைகளை நான் பார்த்து வியந்து கொண்டிருந்தபோது ஒரு மகா அற்புதம் நிகழ்ந்தது. வீட்டின் பின் கட்டிலிருந்து ஒரு பெண் உருவம் நாங்கள் இருந்த சிற்ப மண்டபத்துக்கு வந்தது. ஊனும் உடலும் உயிரும் உள்ள உருவம்தான். ஆனால், அஜந்தாச் சுவரில் நான் பார்த்த சித்திரத்துக்கும் இந்த உருவத்துக்கும் அணுவளவும் வேற்றுமை இல்லை. அதே பூரணச் சந்திரனை யொத்த முகம்; பொன்னிற மேனி; அதே வர்ணமுள்ள உடைகள்; நெஞ்சை ஊடுருவிப் பார்க்கும் நீண்ட நயனங்கள்; கூந்தலை எடுத்துக் கட்டியிருந்த விதமும் அப்படியே. சற்று நேரம் நான் காண்பது உண்மையான தோற்றமா, அல்லது சித்தப் பிரமையா என்று பிரமித்து இருந்தேன்.. அந்த உருவம் அதன் செவ்விதழ்களைச் சிறிது விரித்து, 'அப்பா! இந்தச் சுவாமிகள் யார்?' என்று கேட்ட பிறகு தான், இதெல்லாம் உண்மை என்று உணர்ந்தேன். ஆயனச் சிற்பி என்னைப் பார்த்து, 'இவள் என்னுடைய மகள் சிவகாமி. இவளுடைய நடனத் தோற்றங்களைத்தான் நான் சிலை வடிவங்களாக அமைக்கிறேன்' என்றார். சற்று நேரத்துக்கெல்லாம் சிவகாமி நடனம் ஆடினாள்.

''தம்பி! அந்த நேரம் முதல் இந்த உலகமே எனக்குப் புதிய உலகமாக



மாறிவிட்டது. இவ்வுலகில் யுத்தத்தையும், ராஜ தந்திரத்தையும், இராஜ்ய பாரத்தையும் விட முக்கியமான காரியங்களும் இருக்கின்றன என்பதை உணர்ந்தேன். அஜந்தா அடிவாரத்தில் உன்னைச் சந்திப்பதற்கு முன்னால் சில காலம் அங்கே நான் கண்ட நடனச் சித்திரம் எப்படி என் உள்ளத்தைக் கவர்ந்ததோ, அல்லும் பகலும் அதே நினைவாக இருக்கச் செய்ததோ, அதே மாதிரி இப்போது சிவகாமியின் உருவம் என் உள்ளத்தைக் கவர்ந்தது. உள்ளத்தை மட்டுமா? ஊனையும் உயிரையும் உயிரின் ஒவ்வோர் அணுவையும் கவர்ந்து விட்டது.

'' ஆம், தம்பி! சிவகாமியிடம் நான் காதல் கொண்டேன். பிரேமை கொண்டேன். மோகம் கொண்டேன். இன்னும் உலகத்துப் பாஷைகளில் என்னென்ன வார்த்தைகள் அன்

யையும் ஆசையையும் குறிப்பதற்கு இருக்கின்றனவோ அவ்வளவு வார்த்தைகளையும் குறிப்பிட்ட போதிலும் காணாது என்று சொல்லக் கூடிய வண்ணம் அவள் மீது பிரியம் கொண்டேன். காதல், பிரேமை, மோகம் என்னும் வார்த்தைகளை இந்த உலகம் தோன்றிய நாள் முதல், கோடானு கோடி மக்கள் எத்தனையோ கோடி தடவை உபயோகித்திருக்கிறார்கள். ஆனால், அந்த வார்த்தைகளின் மூலம் நான் குறிப்பிடும் உணர்ச்சியை அவர்கள் அறிந்திருக்க மாட்டார்கள். என்னுடைய காதலில் தேக தத்துவம் என்பது சிறிதும் கிடையாது.

"சிவகாமியின் உருவத்தைக் கண்டு நான் மோகித்து விடவில்லை. அவளுடைய உருவத்தைக் காட்டிலும் அழகிய சித்திர சிற்ப வடிவங்களை நான் கண்டிருக்கிறேன்.



"சிவகாமியின் பசும்பொன் மேனி நிறத்துக்காக அவள் மீது நான் காதல் கொள்ளவில்லை. அந்த மேனி நிறத்தைக் காட்டிலும் பிரகாசமான பொன்னிறத்தை இதோ இந்தச் சந்திரனிடம் காணலாம்.

"சிவகாமியின் கண்ணழகைக் கண்டு நான் மயங்கி விடவில்லை. அவள் வளர்த்த ரதி என்னும் மான் குட்டியின் மருண்ட கண்கள் சிவகாமியின் கண்களைக் காட்டிலும் அழகானவை.

"சிவகாமியின் உடம்பின் மென்மைக்காக அவள் மீது நான் ஆசை கொள்ளவில்லை. அவளுடைய உடம்பைக் காட்டிலும் அதிக மென்மை பொருந்திய எத்தனையோ புஷ்பங்கள் உலகில் இருக்கின்றன.

"ஆம், தம்பி, சிவகாமியிடம் நான் கொண்டிருக்கும் காதலில் தேக தத்துவம் என்பதே கிடையாது.

"ஆகையால் இருபத்தைந்து ஆண்டுகளுக்கு முன்னால் உனக்காக நான் ஏற்றுக் கொண்ட பிக்ஷு விரதத்துக்குச் சிவகாமியினால் யாதொரு பங்கமும் நேரவில்லை...."

இவ்விதம் நாகநந்தி சொல்லி வந்த போது அவருடைய முகத்தில் அசாதாரணமான ஒரு கிளர்ச்சி காணப்பட்டது. புலிகேசி மனத்துக்குள், 'இது என்ன ஒருவகை விசித்திரமான பைத்தியம் போல் இருக்கிறதே? மகேந்திரனுடைய சிறையில் வெகுகாலம் கிடந்ததனால் புத்தி மாறாட்டமாகி விட்டதா?' என்று எண்ணமிட்டார்.

புலிகேசியின் முக பாவத்தைக் கொண்டு இதை ஊகித்து உணர்ந்து நாகநந்தி கூறினார்: "இல்லை தம்பி, இல்லை! எனக்குப் பைத்தியம் பிடித்து விடவில்லை. இவ்வளவு தெளிவாக என்னுடைய அறிவு இதற்கு முன் எப்போதும் இருந்ததில்லை. எனக்கு உண்மையில் சிவகாமியின் மீது ஆசையே கிடையாது. அவளை ஆட்கொண்டிருக்கும் கலைத் தெய்வத்தினிடந்தான் மோகம். சிவகாமி சுயப் பிரக்ஞையை இழந்து தன்னை மறந்து ஆனந்த வெளியில் மிதந்து நடனமாடும்போது நானும் என்வசமிழந்து விடுகிறேன். அப்போது எனக்கு உண்டாகும் ஆனந்தம் இந்த உலகில் வேறெந்தக் காரியத்திலும் ஏற்பட்டதில்லை. தம்பி! மகேந்திர பல்லவனை நான் எவ்வளவோ பகைக்கிறேன்; துவேஷிக்கிறேன்; ஆனால் ஒரே ஒரு விஷயத்தில் மகேந்திரனும் நானும் ஒரே அபிப்பிராயம் கொண்டவர்கள். சிவகாமி கேவலம் மனிதர்களுக்கு மனைவியாகப் பிறந்தவள் அல்லவென்றும், அவளுடைய அற்புதக் கலை தெய்வத்துக்கே அர்ப்பணமாக வேண்டிய கலையென்றும் ஒரு நாள் ஆயனரிடம் மகேந்திர பல்லவன் சொன்னான். புத்தர் சிலையின் பின்னாலிருந்து அதை நான் கேட்டேன். அவனுடைய கூற்றை மனத்துக்குள் பூரணமாக ஆமோதித்தேன். தம்பி! நீ நிச்சயமாக நம்பலாம். சிவகாமியிடம் நான் கொண்ட காதலினால் என்னுடைய பிக்ஷு விரதத்துக்கு யாதொரு பங்கமும் நேராது" என்று முடித்தார் நாகநந்தியடிகள்.

(தொடரும்)

## பொங்கல் சுற்றுலாக் காட்சி

அண்ணா நகரில் பொங்கல் பானைகள் வளைவும் நகரா தட்டி அழைக்கும் கிராம தேவதையின் கம்பீர மான உருவமும் மக்களை வரவேற்கின்றன. சர்வதேச வர்த்தகப் பொருட்காட்சிக்காக நிறுவப்பட்ட விஸ்வேசுவரய்யா டவர் இந்த ஆண்டு பொங்கல் பொருட் காட்சியின் நடுநாயகமாக விளங்குகிறது. அதன் மீது ஏறிச் சென்னை நகரின் 'ஏரியல்' அழகைக் கண்டு களிக்கலாம். தமிழ் நாடு அரசின் பல்வேறு வளர்ச்சிப் பணிகளை விளக்கும் அரங்கங்கள் அழகுற அமைக்கப்பட்டுள்ளன. பாஞ்சாலங்குறிச்சியில் மறு படியும் எழுந்து நிற்கும் கட்ட பொம்மன் கோட்டை யின் மாதிரியை இங்கு கொண்டு வந்து வைத் திருக்கிறார்கள். பூம்புகாரும் உண்டு. மாரியம்மன் கோயிலின் மாடலும் கூட. ரயில்வே, பொதுப் பணித் துறை, காட்டிலாகா, மீன்வள இலாகா, கைத்தறி, வீட்டு வசதி வாரியம் என்று சுற்றிப் பார்க்க நிறைய இருக்கின்றன. பொழுது போக்க இசை, நாடக, நாட்டிய நிகழ்ச்சிகள் இலவசத் திரைப் படக் காட்சிகள் தினசரி உண்டு. வழக்க மான வளையல், ரிப்பன், கடைகளுக்கும் பஞ்சமில்லை. ஐஸில் வைத்த காஷ்மீர் ஆப்பிள் கிடைக்கிறது.



அரிசி படி ஆறு ரூபாய். மின்வெட்டு காரணமாய் இரவிலே திடீர் திடீரென்று மின்சாரம் நின்று போகிறது. இங்கேயோ மாநில அரசின் சாதனைகளுக்கு வெளிச்சம் போட்டுக் காட்டுகிறார்கள்! ஆயினும் வேதனைகளை இருட்டடிப்பு செய்துவிட முடியுமா? மக்கள் கவலைகளையெல்லாம் மறந்து கொஞ்ச நேரம் மகிழ்ச்சியோடிருக்க ஏராளமான மின்விளக்குகளால் ஒளிமயமான உலகை உருவாக்கியுள்ளனர் போலும்!

பனி, குளிரை மதிப்பவர்கள் தக்க பாதுகாப்புடன் போகவும்.

—வி. கே. எம்.

---

## அந்தரத்தில் அற்புதம்



பெரும்பாலும் சர்க்கஸ் தொழிலை நடத்தி வருபவர்கள் மகாராஷ்டிரரும் மலையாளிகளும்தாம். இதில் தமிழ் நாட்டைச் சேர்ந்த ஒருவர் முன்னேறி வட நாட்டில் பல வருடங்களாகத் தொழில் நடத்தி வருவதைப் பாராட்ட வேண்டும். இத்தகையவர்தான் நியூ கிராண்ட் சர்க்கஸின் உரிமையாளர்- ஆம்பூரைச் சேர்ந்த ஹனீப்பா.

இந்த சர்க்கஸ் தமிழ் நாட்டுக்கு வருகை தருவது இதுவே முதல் முறை. முதல் தரமான காட்சிகளை இந்த சர்க்கஸில் காண முடிகிறது. யானை மீது சிங்கம் அமர்ந்து பவனி வருகிறது. கூண்டு அமைக்காமலே புலியை அரங்கத்துக்குக் கொண்டு வந்து கயிற்றின் மீது நடக்க வைக்கிறார்கள். மல்லாந்து படுத்த பெண் தன் தூக்கிய ஒற்றைக் காலிலே ஒரு கம்பைப் பாலன்ஸ் செய்து நிற்க வைத்துக் கொள்ள அதன்மீது ஒரு பையன் நின்று பல வேலைகளைச் செய்கிறான். வெறும் தரையில் எவ்வித ஆதாரமும் சாய்மானமுமின்றி ஓர் ஏணியை நிறுத்தி அதன் மீது மடமடவென்று ஏறுகிறார் ஒரு ஜப்பானியர். அதுமட்டுமா? அந்தரத்திலே அந்த ஏணி மீதிருந்தபடியே மூன்று பெண்களையும் சுமந்து காட்டுகிறார், கீழே விழாமல்.

யானைகளின் சிவலிங்க பூஜையும் உண்டு. 'யானையைக் கட்டித் தீனி போடுவது போல' என்பது பெருஞ் செலவுக்கான பழமொழி. ஆனால் பல யானைகளையும் காட்டு மிருகங்களையும் ஆள் படைகளையும் வைத்து நிர்வகிக்கும் சர்க்கஸுக்கான செலவை எந்தப் பழமொழி கொண்டும் விளக்க முடியாது. எனவே நமது அனுதாபத்துடன் ஆதரவும் இவர்களுக்குத் தேவை.

நல்ல முறையில் நடத்தப்படும் நியூ கிராண்ட் சர்க்கஸில் மிருகங்களின் வேலைகள் அதிகமில்லை என்பது ஒரு குறையானாலும் அரங்கேற்றக் காட்சியில் இடம் பெறாத பல வேலைகளை அடுத்து வரும் நாட்களில் இடம் பெறச் செய்வார்கள் என்று நம்புவதற்கும் இடம் இருக்கிறதே. —கௌசிகன்

## நகர்வலம்:

# தோலின் காரமும் சுளையின் இனிப்பும்

-ரா.வீழிநாதன்-

பொங்கல் நன்னாள் அன்று, பொங்கல் வாழ்த்துக்களுடன், சம்ஸ்கிருதப் பேராசிரியர் ஸ்ரீ எஸ். எம். வர்ணேகர் அவர்களைச் சந்தித்தேன்.

'தில் குள கியா கூட் கூட் போலா!' என்ற வாழ்த்துக்களுடன் அவர் எனக்கு எள் உருண்டையைத் தந்தார். 'எள்ளும் வெல்லமும் கலந்து தந்தேன். வெல்லமாகப் பேசு' என்று பொருள்.

நமது பொங்கல் திருநாள் இங்கு மகாராஷ்டிரத்திலே 'தில் சங்கராந்தி' என்று வழங்குகிறது.

''இந்தப் பெயர் வரக் காரணம் என்ன?'' என்று வர்ணேகரைக் கேட்டேன்.

''திலம் என்றால் எள் என்று பொருள். அளவையும் குறிக்கும். சங்கராந்திக்குப்பின் எள்ளளவு எள்ளளவாகச் சூரியன் வடக்கு நோக்கிச் செல்வதால் இந்தப் பெயர் வந்தது'' என்றார் அவர்.

''எங்கள் பக்கத்தில் ஒப்பிலியப்பன் உப்பிலியப்பன் ஆனது போல் எள் என்னும் பொருளை ஏற்று எள்ளுருண்டை வழங்கும் வழக்கம் வந்திருக்குமோ ?''

''இல்லை, இல்லை! ஜோதிஷ சாஸ்திரப்படி மகர சங்கராந்தி. ஆயுர்வேத சாஸ்திரப்படி தில சங்கிராந்தி. தனுர் மாதத்தில் அடிவயிற்றில் எள்ளும் 'வெல்லமும் சாப்பிடுவது ஆரோக்கியத்துக்கு எடுத்தது. விடியற்காலையில் பலரும் இப்படிச் சாப்பிடுவது உண்டு!''

இப்படி ஆரோக்கிய சாஸ்திரம் பேசும் ஸ்ரீ வர்ணேகர் சம்ஸ்கிருதத்தில் வீர சிவாஜியைப் பற்றி மகா காவியம் இயற்றிச் சாகித்ய அகாதெமிப் பரிசு பெற்றவர். விவேகானந்தர் வாழ்வை நாடகமாக இயற்றி மேடையும் ஏற்றி மகிழ்ந்தவர்.

''இந்த ஊருக்கு நாகபுரி என்று எப்படிப் பெயர் வந்தது?''

இக்கேள்விக்கு விடை அளித்தவர் மராட்டி தினசரி 'தருண் பாரத்'தின் ஆசிரியரான



'இரண்டு எருமைக் கடாக்கள் வயலில் மோதிக் கொள்வதை வேடிக்கை பார்க்கிறோம். அவற்றில் எது ஜெயிக்கிறது, எது தோற்கிறது என்பதா பிரச்னை ? விளையும் வயல் அல்லவா வீணாகிறது?'

திரு மா. கோ. வைத்யா. சுலபமாகச் சொல்லி விட்டார், நாகநதி பாய்வதால் என்று !

'கோடை காலமாக இருந்தால் நீராடியிருக்கலாம். இந்தக் குளிரில் யார் குளிப்பது?' என்று கணக்குப் போட்ட மனம், கூட வந்திருந்த ஆங்கிலப் பேராசிரியர் ஸ்ரீ ஆர். கோபாலனைத் திரும்பிப் பார்த்தது. அவர் வந்த சிரிப்பை வாய்க்குள் அடக்கிக் கொண்டது வேடிக்கையாக இருக்கவே, வாய்விட்டுக் கேட்காமல் விட்டேன்.

தமிழ் நாட்டைச் சேர்ந்த கோபாலன் வரலாற்றுப் பேராசிரியராகப் பணியாற்ற இங்கு வந்தவர். தாய்மொழிப் பாடத்திட்டம் இங்கும் புகுந்துவிடவே, ஆங்கிலத்திலும் தேர்ச்சி பெற்றுத் தம் உத்தியோகம் நிலைக்க வழி தேடிக் கொண்டதோடு நாகபுரியிலும் நிலைத்துவிட்டார்.

எனவே, ஸ்ரீ வைத்யாவும் கோபாலனும் போட்டி போட்டுக் கொண்டு மாறி மாறி நாகபுரியின் வரலாற்றுச் சிறப்பை எடுத்து உரைத்தனர். அதன் சாராம்சம் இதோ :



''கண்ணாடியைக் கழற்றி விட்டார்களா !''

□

'எள்ளும் வெல்லமும் கலந்து தந்தேன், வெல்லமாகப் பேசு'.

''ஆரம்ப காலத்தில் இந்தப் பிரதேசத்தை 'கோண்ட்' என்னும் இனத்தவர்கள் ஆண்டு வந்தனர். இப்பகுதிக்கு 'கோண்ட் வன்' என்றுகூடப் பெயர் உண்டு. இவர்களில் பக்த புலந்த் குறிப்பிடத்தக்கவர். இம் மன்னர் பரம்பரை தோல்வியைத் தழுவ நேர்ந்தபோது, இஸ்லாமை ஏற்றது. அப்புறம் சுதந்திரம் பெற்ற பொழுது இந்துவாகவும் மாறியது.''

அவர்கள் இந்தக் கட்டத்தைக் கூறிய பொழுது, டாக்டர் அம்பேத்கரின் தீக்ஷா பூமி நினைவுக்கு வந்தது. அவர் எத்தனையோ தாழ்த்தப்பட்டவர்களைப் பௌத்த மதம் தழுவச் செய்தது இந்த நாகபுரி நகரில்தானே? எங்கே தாழ்த்தப்பட்டவர்களுக்குரிய சலுகைகள் தங்களுக்குக் கிடைக்காமல் போய் விடுமோ என்று இரண்டு உரிமைகள் கொண்டாடும் சமுதாயத்தைப் படைத்து வரலாறு கண்ட இடமே தீக்ஷாபூமி.

''அப்புறம் சத்ரபதி சிவாஜியில் தொடங்கி போன்ஸ்லே மன்னர்கள் வரை இந்தப் பகுதியை ஆண்டு வந்திருக்கிறார்கள். மராட்டிய சாம்ராஜ்யம் விரிந்த நாளிலே ரகோஜி போன்ஸ்லே இந்த நகரைத் தலைநகராக்கிப் பெருமை சேர்த்திருக்கிறார். சீதா பல்டி கோட்டை இதற்குச் சான்றாக நிற்கிறது. இன்றும் இது ராணுவக் கூடம்.

வாரிசு இழந்த வம்சங்களிடமிருந்து ஆட்சியைக் கைப்பற்றுவதில் கைதேர்ந்தவர்களான ஆங்கிலேயர்களின் கைக்கு மாறிய கதையைக் கூறவும், வேண்டுமா ? பிரார் — மத்திய மாகாணங்களின் தலைநகராகத் திகழ்ந்து, ராஜ்ய புனரமைப்பின் கீழ் மகாராஷ்டிரத்தோடு இணைந்து, விதர்ப்ப மக்களைத் திருப்திப் படுத்துவதற்காக வேண்டி இன்று உப தலைநகராகக் காட்சி தருகிறது. ஆண்டுக்கு ஒரு முறை, குளிர் காலத்தில் இங்கு சட்டசபை கூடுகிறது. எனவே, அரசுக் கட்டடங்கள் பெருகக் கேட்பானேன் ?

நாகபுரி ஜண்டா சத்தியாக்கிரகம் சரித்திரப் புகழ் வாய்ந்தது. கையில் வாளுடன் வளைய வந்த ஜெனரல் மஞ்சேகர் அவாரி என்பவரிடம், ''அஹிம்சைப் போருக்குக் கத்தி கூடாது'' என காந்திஜி கூறியபொழுது, ''எதிரிகளைக் கொல்ல நான் வாள் ஏந்தவில்லை, பாபுஜி ! முறைகேடு ஏதாவது நிகழ்ந்தால் என் தலையைக் கொய்துகொள்ளவே, ஏந்தி நிற்கிறேன்!' என்று கூறி உயர்ந்திருக்கிறார் அவர்.

அப்படிப்பட்ட நாகபுரி, இன்றைய 'தனித்பாந்தரை'யும் தோற்றுவித்திருக்கிறது; நம் துரதிர்ஷ்டம் கோல் எடுத்தவன் கை வலிமை பெற்றுள்ள காலம் இது.

நடுத்தர வகுப்பினரை முதுகெலும்பாகக் கொண்ட ராஷ்ட்ரீய ஸ்வயம் ஸேவக் சங்கத்தின் பிறப்பிடமான நாகபுரியில், அவர்களுடைய தேகப் பயிற்சிக்கென்று



தாரீதாரா மந்திர்

விரிந்துள்ள மைதானம்தான் எத்தனை பெரியது ! இங்குள்ள ஹெட்கேவாரின் சமாதிக்கு ஒரு தனிப் பெருமை உண்டு. பாரதத்தின் பல்வேறு பகுதிகளிலிருந்தும், கொண்டு வரப்பட்ட பல்வகைக் கற்களால் ஆனது. அவற்றை இணைத்துச் செப்பனிட்டுப் பொருத்தி யிருப்பதும் பெரும் சாதனை. பாரதத்தின் பல்வேறு மொழிகள் பேசும் மக்களையும் இப்படிப் பொருத்திப் பாரத சமுதாயத்தை உருவாக்க வேண்டும் என்று கூறாமல் கூறுகிறது இந்த நினைவுச் சின்னம். அருகிலேயே இருக்கும் கோல்வால்கரின் சமாதியோ துளசி மணம் பரப்புவதைத் தவிர நினைவுச் சின்னமாக எழும்பவில்லை. எத்தனையோ சிலைகள் உள்ள இந்த நகரத்தில் கோல்வால்கர் தமக்குச் சிலை வைத்து நினைவுச் சின்னம் எழுப்பக் கூடாது என்று



'' வாளின் ஆதாரத்தில் நிற்கிறது!''

தடுத்திருப்பதே அவருக்கு ஒரு பெரிய நினைவுச் சின்னமாகிவிட்டது!

இப்படி எண்ணியவாறே தாதா தர்மாதிகாரியைச் சந்திக்கச் சென்றேன். அவர் குமாரர் நீதிபதி ஸ்ரீ சந்திரசேகர தர்மாதிகாரியைத்தான் சந்திக்க முடிந்தது.

''நாகபுரி இரண்டு பொருள்களுக்குப் புகழ் வாய்ந்தது. எது, எது தெரியுமா?'' என்று கேட்டார் அவர்.

''ஒன்று சந்தரா என்னும் ஆரஞ்சுப் பழம். இன்னொன்று என்ன?'' நான் கேட்டேன்.

''விதர்ப்ப மண்ணைச் சேர்ந்த மகாராஷ்டிரன். ஆரஞ்சுக்கும் அவனுக்கும் இயல்பிலும் ஓர் ஒற்றுமை உண்டு. சந்தராவின் மேல் தோல் காரமாயிருக்கும். உள் சுளை வெகு இனிப்பாக இருக்கும். அதே போல் மராட்டியன் மேலுக்குக் கடுமையாகத் தோன்றினாலும் உள்ளத்தால் நல்லவன்!'' என்றார்.

மகாராஷ்டிரம் வீரத்தின் விளைநிலம். வெற்றி தோல்வியைப் பொருட்படுத்தாமல் வீரத்தைப் போற்றுவார்கள். சான்று சிவாஜியின் சிலையும் ஜான்ஸி ராணியின் சிலையும். ஒன்று வெற்றியின் சின்னம்; இன்னொன்று தோல்வியின் சின்னம். ஆனால் இரண்டுமே வீரத்தின் சின்னம் என்பதாகப் போற்றுகிறார்கள்.

முன்னங் கால்களைத் தூக்கி அந்தரத்தில் நிறுத்திப் பறக்கும் குதிரையாகக் காட்சி தரும் ஜான்ஸி ராணியின் குதிரை. அதன் வாலின் பலத்தில்தான் நிற்கிறது. ஆனால் அடித்தளம் அமைத்திருக்கும் முறை, குதிரை கீழே குதித்துவிடாமல் இருக்க வேண்டுமே என்ற அச்சத்தில் பெரிதாக அமைத்திருப்பதாகத் தோன்றுகிறது.

அரசியல் கட்சிகள் பல தோன்றி நாக்பூர் நகரத்தை எப்படி அரசியல் போட்டிக் களமாக்குகின்றன என்பதைப் பற்றி வேடிக்கையாகக் குறிப்பிட்டார் தர்மாதிகாரி.

''இரண்டு எருமைக் கடாக்கள் வயலில் மோதிக் கொள்வதை வேடிக்கை பார்க்கிறோம். அவற்றில் எது ஜெயிக்கிறது, எது தோற்கிறது என்பதா பிரச்னை? விளையும் வயல் அல்லவா வீணாகிறது?''

உலக ஹிந்தி மகாநாட்டுக்காகவும் நான் வந்திருக்கிறேன் என்பதை அறிந்த அவர், ''இவ்வூரில் உள்ள காந்தி சிலையைப் பார்த்தீர்களா? மகாநாட்டை ஒட்டி வண்ணம் பூசி மூக்குக் கண்ணாடி போட்டுவிட்டார்கள். போன அக்டோபர் மாதம் இரண்டாந் தேதி யாரோ — நல்லிதயம் படைத்தவராக இருக்க வேண்டும் — கண்ணாடியைக் கழற்றிக் கடாசிவிட்டார். காரணம், காந்தியடிகளின் சிலைக்குப் பின்னால், சாராயக் கடைகள், போலீஸ் காவல் நிலையம் ஆகியவை இருக்கின்றன. அங்கு நடக்கும் அக்கிரமங்கள் காந்தியின் கண்களில் பட்டுவிடக் கூடாதே என்ற நல்ல எண்ணம் காரணமாக!

''இந்த நாகபுரி நகரத்தில் இருக்கும் பல்வேறு மொழிக்காரர்களும் மொழிவாரியாகத்தான் வசித்து வருகிறார்கள். பிரிந்து, பிரிந்து. அதனால் இதை இந்தியாவின் ஒரு 'பாக்கெட் எடிஷன்'தான் கொள்ளத் தோன்றுகிறது!'' என்றார் அவர்.

இதே நிலைதான் பாரதம் முழுவதிலுமே. உலக ஹிந்தி மகாநாடும்கூடப் பாக்கெட் எடிஷனாகத்தான் தோன்றியது. அந்தந்த மொழிகள் பேசும் மக்கள் கூடி நின்றார்களே ஒழிய எல்லா மொழி மக்களும் இணைந்து செயல்பட்டதாகத் தோன்றவில்லை. உலகத் தமிழ் மகாநாடுதான் உலக ஹிந்தி மகாநாட்டுக்கு முன்னோடி என்று பேசிக் கொண்டாலும் இது நிறைவு தராத மகாநாடு. ஹிந்தி மொழி பேசும் மக்களேகூட வெறுப்பை உமிழ்ந்து எதிர்மகாநாடு நடத்தினார்கள் என்றால், ஏற்பாட்டில் ஏதோ கோளாறு என்றுதானே கொள்ள வேண்டும்?

ஹைஜார் குன்றுகள் என்று வழங்கும் செமினரி குன்றுகளை ஒட்டிப் பல ஏரிகள், அம்பா ஜரி, தெலன் கேடி, கோரேவாரா, புதார என்று. இவை நகருக்கு நீர் வழங்குபவை.

திருவாரூர் கமலாலயத்தைப் போன்ற பெருங்குளம் காந்திஸாகர் என்ற பெயரில் இருக்கிறது. இதைச் சுக்ரவார் குளம் என்றும் ஜும்மா குளம் என்றும்கூடக் கூறுகிறார்கள். இரண்டு சொற்களுக்கும் வெள்ளிக்கிழமை என்றே பொருள். இருநூறு ஆண்டுகளுக்கும் மேல் பழைமையானது. நடுவே உள்ள நீராழி மண்டபத்துக்கு ஒரு கரையிலிருந்து நடைபாதையே செல்கிறது. இக்குளத்தைக் கண்ணீர்க் குளம் என்றும் கூறுகிறார்கள். இந்தக் கண்ணீரின் கதையை அறிய முயன்றேன். யாருக்கும் தெரியவில்லை.

நாகபுரி ரிசர்வ் பாங்குக்கு ஒரு பெருமை. பொற்பாளங்களைப் புதையல் எனப் பாதுகாத்து வருகிறது!

லக்ஷ்மி நாராயண் இன்ஸ்டிட்யூட் ஆஃப் டெக்னலஜி தோன்றிய கதை கவனத்தைக் கவருவது, கருத்தை ஈர்ப்பது.

ஆந்திராவைச் சேர்ந்த ஸ்ரீ லக்ஷ்மி நாராயண் தமது வருமானத்தில் பெரும் பகுதியை ஆந்திரக் கல்விப் பணிக்குச் செலவிடுவது என்ற நோக்கோடு வால்டேருக்குச் சென்றார், ரயில்வேயின் முதல் வகுப்பு அறையில் தாம் தங்குவதாகவும் குறிப்பிட்ட நேரத்தில் தம்மை வந்து காணுமாறும் அந்நாளைய வைஸ்சான்ஸலர் கே. வி. ரெட்டிக்கு முன்கூட்டியே கடிதம் எழுதித் தெரிவித்துவிட்டு!

வைஸ் சான்ஸலர் 'யாரோ கூப்பிட நாம் போவதாவது?' என்று பேசாமல் இருந்துவிட்டார். நாகபுரிக்கு அடித்தது அதிர்ஷ்டம்! தாம் சம்பாதித்த பூமிக்கே தம் பொருளைச் செலவிடுவது என்று திட்டமிட்டுத் திரும்பிய லக்ஷ்மி நாராயண் அவர்களின் பெயர் நாகபுரியில் வழங்கக் காரணம் இதுவே.

இந்த நாகபுரி நகரம் இந்தியாவின் மத்திய கேந்திரமாக — மையப் புள்ளியாகத் திகழ்வது. இதற்குச் சான்றாக ஸீரோ மைல் (Zero Mile) என்ற கம்பம் நிற்கிறது. இத்தூணைத் தேடிப் போகப் பக்கத்தில் உள்ள பெட்ரோல் பம்பைத்தான் அடையாளம் வைத்துக் கொள்ள வேண்டும்! அவ்வளவு அழகாக இந்த வரலாற்றுச் சின்னத்தைப் பாதுகாக்கிறார்கள்!

ராம்நகர் பகுதியில் பகவத்பாத சபைக்கு அருகில் சர்வேசுவராலயம் உருவாகி வருகிறது. நாகபுரிவாழ் தென்னிந்தியர்களின்

படிப்படியாக உயர்ந்து

முன்னேற்றமடைந்த அவருக்குத் தெரியும்..

...அழகான ஆடைகளும் அதற்கு உதவின என்று!




நிச்சயமாக, மபத்லால் க்ரூப் அளிப்பவை நேர்த்தியான துணிமணிகள்தான்!

AIYARS-M. 458 TM

பங்காக. பகவத்பாத சபையோ ஸ்ரீ காஞ்சி ஆசாரியரினால் பொருளுதவியும் நல்கிப் பெய ரும் சூட்டப்பட்ட சபையாகும். இவற்றுக்கு ஆணிவேராக நிற்பவர் ஸ்ரீ நாராயண ஐயர்.

தென்னிந்திய சங்கம், ஆந்திரா அசோசியேஷன், கர்நாடக சங்கம், கேரளீய சமாஜம் போன்றவை தங்கள் வட்டத்தினுள் அரும் பெரும் பணி புரிந்து வருகின்றன.

சரஸ்வதி வித்யாலயம் இங்குள்ள தென்னிந்தியர்களின் முயற்சியினால், தமிழ், மராட்டி, ஆங்கிலம் ஆகிய மொழிகள் கற்பிப்பதோடு ஏறக்குறைய இரண்டாயிரம் குழந்தைகளுக்கு வெகு சிறப்பாகக் கல்வி புகட்டி வருகிறது.

கல்கத்தா ஸ்ரீ கிருஷ்ணன் அவர்கள் இங்கு மாற்றலாகி வந்ததிலிருந்து பாரதி சங்கம் நிறுவிப் பாரதியின் புகழுக்குப் புகழ் பாடி வருகிறார்.

இந்த நகரை ரயில்வே நிலையத்துக்கு அப்பாலும் இப்பாலும் என்று இரு பிரிவுகளாகப் பிரிக்கலாம். இப்புறப் பகுதியில் புதிய நகரம். அப்புறப் பகுதியில் பழைய நகரம் சின்னஞ்சிறு சந்துகளும் பொந்துகளும் நிறைந்து ஆபாசக் களஞ்சியமாகக் காட்சி தருகிறது. இந்த நகரில் ஒவ்வொரு கிழமைகளில் ஒவ்வொரு பகுதியில் சந்தை கூடுகிறது. அந்தந்தப் பகுதி மக்கள் அங்கு அங்கு தமக்கு வேண்டிய பொருள்களை வாங்கிக் கொள்ளலாம். இந்தச் சந்தைகள் இத்வகரி, ஸோம்வாரி என்று அந்தந்தக் கிழமைகளின் பேரில் வழங்குகின்றவை.

மராட்டிய மாநிலத்தில் நிலத்தில் பாடுபடுபவர்கள் பெரும்பாலும் டி.எம்.கே.க்கள்; ஆம், .தேஷ்முக், மராட்டா, குன்பீ என்று அழைக்கப்படுபவர்கள் !

மராட்டியர்கள் குடும்பப் பெயருக்கும், ஊர்ப் பெயருக்கும் முக்கியத்துவம் தருகிறார்கள். பிரபலமான குடும்பப் பெயர்கள் ஒருபுறம் இருக்க, சில விசித்திரமான பெயர்கள் இதோ ; ஆக்லாவே [தீ கொண்டு வந்தவர்] வாக்மாரே (புலி அடித்தவர்) ஸஹஸ்ர - போஜனே [ஆயிரம் சாப்பாடு] போட் துகே [வயிற்றுவலி] போன்றவை.

நடுத்தர மராட்டியர் ஒருவரைக் கேட்டேன்: ''தென்னிந்தியர்களிடம் உங்களுக்கு ஏன் இந்தக் காழ்ப்பு?''

நேரிடையாகவே அவர் விடை அளித்தார் : ''காழ்ப்பும் இல்லை, கீழ்ப்பும் இல்லை. அவர்களும் வெள்ளைச் சட்டைக்காரர்கள். நாங்களும் வெள்ளைச் சட்டைக்காரர்கள். இருவருமே உத்தியோகத்தை நம்பி வாழ்பவர்கள். எங்கே நம் வேலையைப் பிடுங்கிக் கொள்வார்களோ என்ற பயமே ஒழிய, மற்றபடி அவர்கள் எங்கள் நண்பர்களே !''

ஆனால் இரண்டு மூன்று சகோதரிகளுக்குத் திருமணம் செய்து பார்த்துள்ள நண்பர் ஸ்ரீ காசிவிசுவநாதனுக்கு மட்டும் மராட்டியர்களிடம் சொல்லி முடியாத ஒரு பொறாமை. அந்தப் பொறாமைக்கு அடிமையாகி, மராட்டியர்களின் திருமணச் சிக்கனத்தை எவ்வளவு புகழ்கிறார், தெரியுமா ?

சீர் செனத்தி, நட்டு — நகை, விருந்து, கல்யாண மண்டபம் என்று அவர்கள் அதிகம் செலவு செய்வதில்லையாம். 'கமட முகூர்த்' கணித்து அதாவது முகூர்த்த நேரம் குறித்து மங்களாஷ்டம் ஓதுவார்களாம். ஆணுக்கும் பெண்ணுக்கும் இடையே ஒரு திரை தொங்குமாம். குறித்த முகூர்த்த நேரத்தில் 'வதூவர ஸாவதான்' என்று எச்சரிக்கை விடுத்துத் திரையை அகற்றி மாலை மாற்றச் செய்வார்களாம். விருந்தும் வெகு சிக்கனமாக இருக்குமாம்.

பூசணியைப் , பார்த்துப் பூசணி நிறம் பற்றுவது போலத் திருமண விஷயத்தில் மராட்டியர்களை 'நாம் பின்பற்றினால் பல திருமணங்கள் கலபமாக முடியும் என்று நம்பும் இவருக்கு, நம்மைப் பார்த்து மராட்டியர்களில் சிலர் காப்பி அடிப்பதைக் காணக் கவலையாகவும் இருக்கிறது !

விநாயக சதுர்த்தி இந்தப்பகுதியில் வெகு பிரசித்தம். கணேஷ் உத்ஸவ் மண்டல் நிறுவிக் கொண்டாடுவார்கள். விநாயகப் பெருமான் அவ்வப்போது இருக்கும் அரசியல்—சமுதாயச் சூழ்நிலைக்கேற்பத் துப்பாக்கி ஏந்தி, டாங்குகளில் அமர்ந்துகூடத் தரிசனம் தருவார் !

இப்படி நாகபுரி நகரத்தின் நரகத்தையும் சொர்க்கத்தையும் பார்த்துக் கொண்டே வந்தவன், உட்சிரிப்புச் சிரித்து ஸ்ரீ கோபாலனிடம் கேட்டேவிட்டேன் : '' இன்னும் நாம் நாகநதியைப் பார்க்கவில்லையே!''

அவர் நாகபுரியைச் சுற்றி வந்த நல்லா [சாக்கடை]வைச் சுட்டிக்காட்டி, ''இது தான் நாகநதி ! நாகபுரியைப் பாம்பாகச் சுற்றிச் சுற்றி வருகிறதல்லவா?'' என்றார்.

மணக்கும் சென்னைக் கூவத்தின் அருகில் நிற்பதாகத் தோன்றவே, எனக்கு நாக்பூர் குளிரவில்லை; குளிர் விட்டுப் போயிருந்தது !



## ஸ்ரீ ரத்னகிரீஸ்வரர் ஆலயம்

சிருங்கேரி பெரியவர்கள் பூமி பூஜை செய்து அனுக்கிரஹித்தார்கள். காஞ்சி ஆசார்யாள் மகாலிங்கம் பிரதிஷ்டை செய்யச் சொன்னார்கள். இதற்குப் பொருத்தமாகப், பல நூற்றாண்டுகளுக்கு முற்பட்ட ஒரு மகாலிங்கம் திருவான்மியூர் கடற்கரையில் அதிசயமாகக் கிடைத்தது! இன்று இதைச் சுற்றி வேறு பல தெய்வங்களையும் பிரதிஷ்டை செய்து பெஸண்ட் நகரில் கோயில் எழுப்பியுள்ளனர். பிப்ரவரி 16ந் தேதி மகா கும்பாபிஷேகத்தைச் சடபுரம் ஸ்ரீ ராமசந்திரானந்த தீர்த்த மஹாஸ்வாமிகள் நடத்தி வைக்கிறார்கள். அன்பர்கள் பொருளுதவி செய்தும் வைபவத்தில் கலந்து கொண்டும் ஸ்ரீ ரத்னகிரீஸ்வரர் ஸ்ரீ அரணகேசி அம்பிகையின் அருள் பெற வேண்டும்.

விலாசம்: பக்த மண்டலி, ஸ்ரீ ரத்னகிரீஸ்வரர் ஆலயம், பெஸண்ட் நகர், சென்னை - 90.

# வல்லவன் வகுத்த பல்லவன் பஸ்!

அந்த வல்லவன் வகுத்த பல்லவன் பஸ் கொலை செய்துவிட்டு மிக வேகமாக ஓடும் வில்லன் ஒருவனைப் போல் திடீரென்று ஓடத் தொடங்கியது. அப்போது வண்டியிலிருந்த பயணிகளின் ரத்த நாளங்களில் குருதி மணிக்கு 67 கிலோ மீட்டர் வேகத்தில் பாய்ந்து கொண்டிருந்தது!

299ம் எண்ணுள்ள அந்த பஸ்ஸுக்குள் பயணிகள் கூட்டம் வழிந்தது. அதன் இரு பக்கத்துப் படிகளிலும் 10, 15 பேர் மட்டுமே நின்று கொண்டிருந்தனர். ஒருசில கால்கள் வெளியில் தார் ரோட்டுக்கு மேலே நீட்டிக் கொண்டிருந்தன.



''ஏன் இப்படி நெருப்பு அணைக்கும் என்ஜின் மாதிரி பறக்கிறது?'' என்று நின்று கொண்டிருந்த ஓர் அப்பாவிப் பயணி கேட்டார்.

''முன்னால் போய்க்கொண்டிருக்கும் 299-ஏ பஸ்ஸை ஓவர்டேக் செய்வதற்காகத்தான். . பயணிகளை ஏற்றிக் கொள்வதில் போட்டி. எல்லாம் ஊக்க போனஸுக்காகத்தான்'' என்று விவரம் கூறினார் மற்றொருவர்.

அப்போது வண்டி திடீரென்று ஒரு கிளை வீதி வழியாகப் பாய்ந்து சென்றது. அதைப் பார்த்துக் கொண்டிருந்த ஒரு பெண், ''ஓ! நடத்துனர் ஐயா! இந்த வழியாகப் போகக் கூடாதே! ஒன்வேயாச்சே! முன்னால் போகிற பஸ்ஸை முந்த இப்படி தாறுமாறாக ஓட்டுவதா?'' என்று உரக்கக் கேட்டாள். நடத்துனரைத் துணிந்து அப்படிக் கேட்டுவிட்ட அந்த வீராங்கனை யாரென்று பலர் தலையை நீட்டிப் பார்த்தனர்.



அவள் பேச்சு பேருந்தின் பின் பகுதியில் டிக்கெட்டுகள் கொடுத்துக் கொண்டும், அன்று போனஸ் எத்தனை அதிகம் கிடைக்கும் என்று மனத்துக்குள் கணக்குப் போட்டுப் பார்த்துத் திருப்திப்பட்டுக்கொண்டும் இருந்த கண்டக்டர் காதில் இலேசாக விழுந்தது. ஆனால் அவர் அந்தப் பேச்சை லட்சியம் செய்யவில்லை.

பஸ் போய்க் கொண்டிருந்தது. அந்தப் பெண்ணின் பக்கத்தில் ஒரு கர்ப்பிணி நின்று கொண்டிருந்தாள். அவளுக்குப் பின்னிருந்த ஆசனத்தில் போலீஸ்காரர் ஒருவர் உட்கார்ந்திருந்தது அந்தப் பெண்ணின் கண்களில் பட்டது.

''ஏ காவல் துறை ஐயா! பக்கத்துலே பிள்ளைத்தாச்சி நிற்க முடியாமல் நிற்கிறது தெரியல்லே? எழுந்திரய்யா'' என்று கத்தினாள்.

அந்தக் காவல் துறைக்காரர் மரியாதையாகஎழுந்து இடம் விட்டார்.

அடுத்த விநாடி வண்டி பஸ் ஸ்டாப்பில் நின்றது. ஆனால், டிரைவர் ஓவர்டேக் செய்ய விரும்பிய வண்டி முன்னால் சென்று கொண்டிருந்தது. அதைச் செலுத்தியவர் தாம் வந்த வழியில் உள்ள ஒரு ஸ்டாப்பில் யாரையும் இறக்காமலே' ஓட்டி வந்து பந்தயத்தில் ஜெயித்து விட்டார்!

அந்தப் பெண் வண்டியை விட்டு இறங்கிய வண்ணம் ''இப்படியா ஜனங்களை வண்டியில் போட்டு அடைப்பாங்க! இறங்கக் கூட வழியில்லாமல் படியிலே நிக்க வைப்பாங்களா? அநியாயம்! நாலு துட்டு போனஸ் கூட வரது என்கிறதுக்காக இப்படியா பைத்தியம் பிடிச்சாப்பலே வண்டியை ஓட்டுவாங்க! அதுவும் தவறான வீதியிலே. இவங்களைக் கேட்பாரு கிடையாதா?'' என்று ஒரு குட்டிப் பிரசங்கம் செய்தாள்.

அந்தப் பிரசங்கம் பயணிகளின் காதுகளைக் குளிரச் செய்தது.

''எங்கே அந்த நடத்துனர் ஐயா! டிக்கட் வாங்கணும்'' என்றாள்.

''என்ன பொம்பிளே! சட்டம் பேசறே! பிரமாதமாகப் பதினைஞ்சு பைசா டிக்கெட் வாங்கிவிடுகிறயே அதுக்காகவா?'' என்று கண்டக்டர் கேட்டுக் கொண்டே வந்தார்.

''ஓ! நீங்க இந்தப் பஸ்ஸிலே வர்றீங்களா! நான் கூட்டத்தில் பார்க்கவில்லே!'' என்று அந்தப் பெண் கூறினாள்.

''நீயா பவானி!'' என்று கண்டக்டர் கேட்டு ஆச்சரியப்பட்டார்.

''ஆமாம்! மார்க்கெட்டுக்குப் போக வந்தேன். இந்தாங்க பதினைஞ்சு பைசா. நான் இன்னும் டிக்கெட் வாங்கவில்லே. டிக்கெட் கொடுங்க!'' என்று கூறிச் சில்லறையைக் கொடுத்தாள்.

டிக்கெட்டை வாங்கிக் கொண்டு ''இந்தாங்க, நமக்குப் போனஸ் காசு நிறைய வேண்டாம். அதுக்காக டிரைவரை இப்படி ஓட்ட விடாதீங்க. 'நான் சொன்னபடி தானே அவரு ஓட்டியாகணும்' என்று பெருமையாகச் சொல்லுவீங்களே! ஜாக்கிரதை!'' என்று அன்புடனும் கவலையுடனும் கூறிவிட்டுச் சென்றாள் நடத்துனரின் மனைவி.

— என். பாலாஜி




**பூர்வ கதை**

பெரும் பணக்காரர் ஆரோக்கியசாமியின் வீட்டுக்கு ஒரு பெண்ணை ஏற்றிச் செல்லும் டாக்ஸி டிரைவர் தாமஸ் அங்கு அவளை அப்பணக்காரரின் மகன் பலவந்தப்படுத்த முயல்வதைக் கண்டு அவனை அடித்துக் கொன்று விடுகிறான். அந்தப் பெண் பயந்து ஓடி விடவே தாமஸ் கொலை செய்ததாகப் போலீஸார் எண்ணுகின்றனர். ஆனால் தாமஸின் 'கன்ஃபெஷனை'க் கேட்ட பாதிரி அருமைநாயகம் அது கொலைக் குற்றமல்ல என்று கருதுகிறார். தகுந்த சாட்சியங்களைத் தேடிக் கண்டுபிடிக்கும் வரை அவனைக் கண்மறைவாயிருக்கப் பண்ணுகிறார். பாதிரியை இதற்காகப் போலீஸார் கைது செய்ய, அவரை ஜாமீனில் விடுவித்து அழைத்து வருகிறார் வக்கீல் சத்யநாராயணா.

தெலுங்கரான சத்யநாராயணா, தமிழ்மகள் பங்கஜத்தைக் காதலித்து மணந்து கொண்டதால் அவர்கள் இல்வாழ்க்கையில் நகைச் சுவை தாராளமாகவே குதி போடுகிறது. இவர்களது மகன் வெங்கட் வாலிபன், விஷமக்காரன். சிறிய டேப் ரிகார்டர் கொண்டு ரகசிய சம்பாஷணைகளைப் பதிவு செய்து விடுவான்! வழக்கில் வாய்தா வாங்கிக் கொடுத்தால் தாமஸ் குற்றமற்றவன் என்பதற்கான சாட்சியங்களைத் தம்மால் சேகரிக்க முடியும் என்கிறார் பாதிரி. சத்திய நாராயணா இதற்கு ஒப்புக் கொள்கிறார்.

---

காட்சி 5

(கோர்ட். மாஜிஸ்டிரேட், பெஞ்ச் கிளார்க், பப்ளிக் பிராஸிக்யூட்டர், பியூன், சத்யநாராயணா, ஃபாதர் அருமைநாயகம்.)

*பப்ளிக் பிராஸிக்யூட்டர்:* யுவர் ஆனர்... முப்பது நாள் வாய்தா கேட்கிறார் என் நண்பர்; இது அநாவசியமானது.

*சத்தியநாராயணா:* யுவர் ஆனர்... அநாவசியம் அனி எட்ல செப்பேதி? எதி அவசியம் எதி அனுவசியம்னு டிஸைட் சேஸேதி கோர்ட். பப்ளிக் பிராஸிக்யூடர் காது.

*ப. பி.:* யுவர் ஆனர்! குற்றம் சாட்டப்பட்டுள்ள பாதிரியார் ஒரு கொலைக் குற்றம் சாட்டப்பட்டவருக்கு அடைக்கலம் கொடுத்திருப்பதாகத் தாமே ஒப்புக்கொண்டு ஸ்டேட்மெண்ட் கொடுத்திருக்கிறார் — ஜாமீனில் இருக்கிறார். இவ்வழக்கிற்கு நீண்ட நாள் வாய்தா கொடுத்து, இவர் ஜாமீனிலும் இருந்தால் அந்தக் கொலைக் குற்றம் சாட்டப்பட்டவன் தப்பித்துக் கண்காணாமல் போய் விட இவர் உதவி செய்ய மாட்டார் என்பது என்ன நிச்சயம்?

*மாஜிஸ்டிரேட்:* வாட் டு யூ ஸே மிஸ்டர் சத்யநாராயணா?

*சத்:* யுவர் ஆனர், அந்த மாதிரி அவனைக் கண்காணாமல் தப்பிக்க வைத்து அகப்படாமல் போகச் செய்வது லேது இவரு எண்ணமு. அந்த மாதிரி எண்ணம் உண்டே இவர் எந்துகு ஸ்டேட்மெண்ட் இஸ்தாரு? ஹீ உட் ஹேவ் செட் ஐ டோண்ட் நோ!

*மாஜி:* மிஸ்டர் சத்யநாராயணா! இவருடைய எண்ணம் என்ன என்பது இங்கே பிரச்னை அல்ல. கொலைக் குற்றம் சாட்டப்பட்டுள்ளவன் தப்பித்துப் போக இவர் உதவி செய்ய மாட்டார் என்பது என்ன நிச்சயம்?

*சத்:* இட் ஈஸ் காமன் சென்ஸ் யுவர் ஆனர்.

*ப. பி.* யுவர் ஆனர்!

*மாஜி:* பப்ளிக் பிராஸிக்யூட்டர்! ஒன் மினிட். நான்தான் அவரைக் கேட்டுக்கிட்டிருக்கேனே!...

*சத்:* யுவர் ஆனர்! அந்த மாதிரி செய்யறவராணு எதுக்கு ஸ்டேட்மெண்ட் கொடுக்கிறாரு? அவன் இப்ப தப்பிச்சுக்கினு போனா இவரே மாட்டிப்பாரு... ஹீ வில் பி. காட்.

*ப. பி.:* ஹீ ஈஸ் ஆல் ரெடி காட்...

*சத்:* நோ. யூ ஆர் ட்ரையிங் டு கேச் ஹிம். அண்ட் ஐ நோ யூ வில் ட்ராப் ஹிம், யூ ஆர் லைக் அவர் இண்டியன் கிரிக்கட்டர்ஸ். யூ ஆர் கேபபள் ஆஃப் டிராப்பிங் எனி கேச்!

*மாஜி:* மிஸ்டர் சத்தியநாராயணா! இஃப் யூ ஹேவ் எனி ஆர்க்யூமெண்ட்ஸ், கன்டின்யூ.

*சத்:* யுவர் ஆனர்... எப்புடு நா தான் அவனை ஒரு எடத்துலே வைச்சிருக்கேன்னு ஸ்டேட்மெண்ட் இஸ்துன்ரோ அப்புடே ஏமி தெலுசிந்தி? இவரு ட்ருத் பேசுறாரு. இவன் தப்பிச்சுப் போயிட்டா இவரு ரெஸ்பான்ஸிபிள் ஆவுதாரு. ஹீ ஈஸ் எ பிரீஸ்ட் அதி மனசுலோ பெட்டுகுவல. வான்னு அட்ல சேஸ்தாரா?

ப. பி.: என்ன அட்ல சேஸ்தாரா? ஏன் செய்ய மாட்டார்? இப்ப ஒரு கொலையாளியைத்தானே ஒளிச்சு வைச்சிருக்கார்?

சத்: கொலையாளி அனி எவர் சொன்னது? மீரு ஜட்ஜா? பப்ளிக் பிராஸிக்யூடரா? ஹீ ஈஸ் ஒன்லி ஆன் அக்யூஸ்டு. ஆனு அவர் நிரபராதி அனி பாதிரியாரு அவனுக்கு ப்ரொடக்ஷன் கொடுத்திருக்கிறார் அனி ஸ்டேட்மெண்ட் கொடுத்திருக்காரு அனி போலீஸ் இன்ஸ்பெக்டர் சொல்றாரு அனி நானு சொல்றேனு!

மாஜி: அந்த ஸ்டேட்மெண்டை நீங்க ஒப்புக்கிறீங்களா இல்லையா?

சத்: அதிகே ஒஸ்தானு... அந்த ஸ்டேட்மெண்ட் நேனு சரியா படிக்க லேது. நாகு டைம் லேது. ஈ கேஸ் நானு சரிகா ஸ்டடி செய்ய லேது.

ப. பி.: தட் ஈஸ் யுவர் ஃபால்ட்!

சத்: தட் ஈஸ் மை ஒன்லி ஃபால்ட், ஆல் அதர் ஃபால்ட்ஸ் ஆர் யுவர்ஸ்!

மாஜி: மிஸ்டர் சத்யநாராயணா! யூ ஆர் ஒன் ஆஃப் த சீனியர் மோஸ்ட் லாயர்ஸ். நீங்களே இப்படிப் பேசிக்கிட்டிருந்தா எப்படி? ப்ளீஸ் கம் டு த பாயிண்ட்.

சத்: யுவர் ஆனர்! மை கிளையண்ட் ஒக்க கிறிஸ்டியன் பிரீஸ்ட். ஹீ ஈஸ் அக்யூஸ்டு ஆப் ஹைடிங் ஏ கிரிமினல். திஸ் ஈஸ் ஏ வெரி சீரியஸ் சார்ஜ். வான்னு மைனாரிட்டி கம்யூனிட்டி. ஆர்டினரி மேன் லேது. ப்ரீஸ்ட்! இக்கட ஒக்க மேட்டர். கோர்ஃபுல் சூடவால யுவர் ஆனர்! மீரு ஹிண்டு, பப்ளிக் பிராஸிக்யூட்டர் ஹிண்டு. நேனு ஹிண்டு. அக்யூஸ்டு மைனாரிட்டி கம்யூனிட்டி. ப்ரீஸ்டு. மன கோர்புல்லா கேஸ் நடத்திலேன்னு ஏமி அவுதுந்தி? மெஜாரிட்டி கம்யூனிட்டி மாஜிஸ்திரேட்டு, பப்ளிக் பிராஸிக்யூட்டரு எல்லாம் சேர்ந்து கோர்லஸ் கா, கேஸ் அவசர அவசரங்கா நடத்தி மைனாரிட்டி கம்யூனிட்டி அக்யூஸ்டு கிறிஸ்துவ பாதிரி காரு ஒருத்தரை மோசம் பண்ணிட்டாங்கோ.... அனி ஊர்லே பேச்சு ஒஸ்தே ஏமி சேஸேதி ?

ப. பி.: சாட்சியங்களை வெச்சு கேஸ் போடப் போறேம். இதுலே கோர்லஸ்நெஸ் எங்கே வந்தது ?

சத்: வரலே. வந்தது அனி பேச்சுகூட வரக் கூடாது இல்லையா? ஜஸ்டிஸ் ஷுட் நாட் ஒன்லி பீ டன்; பட் ஆல்ஸோ ஸீம் டு பீ டன். நியாயம் நடந்தா போதாது : நடக்குது அனி அல்லாருக்கும் தெரியவாலா. இது சட்டத்திலே அஸ்திவாரமு. வான்னு மைனாரிட்டி கம்யூனிட்டி — ப்ரீஸ்ட்டு. அவரு மேலே, கிரிமினல் கேஸ் நடக்குது. நாம அவசரப்பட்டுட்டா ஊர்லே அப்படித்தான் பேச்சு வரும்.

ப.பி.: வந்திருக்காது.... இப்ப இப்படி நீங்க இந்த மாதிரியெல்லாம் பேசினதாலே தான் வரும் — இனிமே வரும்.

சத்: எட்லேனு ஒஸ்துந்திகாதா? அதுக்கே நாம கோர்ஃபுல்லா உண்டவல. எந்துக்கன்டே வானு மைனாரிட்டி கம்யூனிட்டி !

ப.பி.: ப்ரீஸ்ட்! தெரியும் !

சத்: இத்தனைதரம் சொன்னாதான் இவருக்குப் புரியுது !

மாஜி: வாட் டூ யூ ஸே மிஸ்டர் பப்ளிக் பிராஸிக்யூட்டர் ?

ப.பி.: யுவர் ஆனர் ! இது ரொம்ப சிம்பிள் கேஸ். எங்களைப் பொறுத்த வரை குற்றவாளியே குற்றத்தை ஒப்புக் கொண்டார்.

சத்: அவர் சொல்றது உண்மைன்னு எப்படி உங்களுக்குத் தெரியும் ?

ப.பி.: அவர் ஒத்துக்கிட்டிருக்காரே !

மாஜி: ஆமாம்; நான்தான் அமலை ஓர் இடத்திலே வெச்சிருக்கேன்



" யுவர் ஆனர் ! இது ரொம்ப சிம்பிள் கேஸ். எங்களைப் பொறுத்த வரை குற்றவாளியே குற்றத்தை ஒப்புக் கொண்டார்."



ப.பி.: பார்த்தீங்களா? அவர் பொய் சொல்ல மாட்டார்! பிகாஸ் ஹி ஈஸ் ஏ ப்ரீஸ்ட்!

சத்: அவர் பொய் சொல்லமாட்டார் இல்லையா? அப்போ அந்தத் தாமஸ் நிரபராதின்னு இவர் சொல்றாரு.

பாதிரி: ஆமாம், அவன் நிரபராதி.

சத்: இதுவும் ஒப்புக்க வேண்டியது தானே? அவர் பொய் சொல்லமாட்டாரு— பிகாஸ் ஹி ஈஸ் ஏ ப்ரீஸ்ட்!

ப.பி.: அவர் சொல்றது எல்லாமே நிஜம்னு எப்படித் தெரியும்?

சத்: அப்புடு அவரு கொடுத்த ஸ்டேட் மெண்ட் நிஜம் அனி எட்ல தெலுசு?

மாஜி: நீங்களே சொன்னீங்களே.

சத்: நேனு செப்தாண்டி. பெஞ்ச் கிளார்க் அக்யூஸ்டு அனி செப்தானு. பப்ளிக் பிராசிகியூட்டருக்கு ஒண்ணும் தெரியாது அனி செப்தானு. தாமஸ் நிரபராதின்னுகூட நேனு செப்தானு — தானி கி ஏமி வேல்யூ? யுவர் ஆனர்! ஹீ பிலாங்ஸ் டு த மைனாரிட்டி கம்யூனிட்டி. ஹீ ஈஸ் எ ப்ரீஸ்ட். எனக்குக் கேஸ் படிக்க நேரமில்லே. இப்புடு முப்பது நாள் வாய்தா கொடுக்கலே சொன்னு நேனு ஈ கேஸ் நடத்தறது லேது. வித் யுவர் பர்மிஷன், யுவர் ஆனர் நேனு பப்ளிக்கா ஒக ஸ்டேட்மெண்ட் இஸ்தானு. 'கோர்ட்லே வாய்தா லேது, அவசரங்கா கேஸ் நடத்த முடியாது. பாதிரிகாரு மைனாரிட்டி கம்யூனிட்டி — ப்ரீஸ்ட். கோர்புல்லா நடத்த[illegible] அனி ஸ்டேட்மெண்ட் இஸ்[illegible] இல் ய - ஸ்டேட்மெ[illegible] டெயிலிங் [illegible] ட்ராயி[illegible] யுவர் ஆனர்? நாகு டைம் காவல. அவசரம் அவசரங்கா கேஸ் நடத்தினா இது ஒரு சொஸைட்டி ப்ராப்ளங்க போதுந்தி. வான்னு மைனாரிட்டி கம்யூனிட்டி — ப்ரீஸ்டு. சொஸைட்டிக்குக் கோர்ட் மேலே மதிப்பு காவல. சொஸைட்டிக்கான சட்டம் உந்தி? சொஸைட்டி விரோதம் செஸ்கோனி சட்டம் உந்தண்டே அது கோர்ட்டுக்கு மரியாதை லேது.

ப.பி.: நீங்க ரொம்ப அநாவசியமா குழப்பிக்கிட்டிருக்கீங்க..... நீங்களே மதப் பிரச்னையைக் கிளப்பறீங்க; வாய்தா வாங்கிக்கிட்டுச் சும்மா காலம் கடத்தப் பார்க்கறீங்க. யூ ஆர் ட்ரையிங் டு ப்ளே வித் டைம்.

சத்: ஐ நெவர் நோ டைம் ஈவன் டு ப்ளே வித் மை ஒய்ப். ஹௌ கேன் ஐ ப்ளே வித் டைம்? ஒன்லி ஓல்ட் பேச்சலர்ஸ் லைக் யூ கேன் டூ இட்.... வான்னு மைனாரிட்டி கம்யூனிட்டி — ப்ரீஸ்ட்.....

(காட்சி முடிவு)

## காட்சி 6

(குப்புசாமி வீடு. பாத்திரங்கள்: சீதா, குப்புசாமி, பாதிரியார் அருமைநாயகம்)

குப்புசாமி (பேப்பர் படித்துக் கொண்டிருக்கிறான்): காதல் தோல்வி; தற்கொலை; ம்.... லாரி மோதி இருவர் மரணம்; பல்லவன் பஸ் விபத்து: மூன்று உயிர் பலி; அய்யய்ய! வர பேப்பர் எல்லாம் சுடுகாட்டிலே அச்சடிக்கிறாங்களா? உம்... சீதா! சீதா!

(குரல்)

சீதா: வந்துண்டே இருக்கேன்.

குப் (படிக்கிறான்): பாதிரியார் அருமைநாயகம் வழக்கு அடுத்த மாதம் வரை தள்ளி வைக்கப்பட்டது; மாஜிஸ்ட்ரேட் உத்தரவு.



''இன்னோ! அந்த டாக்கிமீஸ்லோ என் ஒன்ப்.....ஆ! இது உங்களுக்கே நல்லா இருக்கா?''

ஒஹோ! அந்தப் பாதிரியார் கேஸ்லே வாய்தா கொடுத்துட்டாங்களா ? உம்...

(கிதா உள்ளே வருகிறாள்.)

கிதா: என்னங்க.... எதுக்குக் கூப்பிட்டீங்க ?

குப்: ஆபீஸுக்கு டைம் ஆவுது. டிபன் பாக்ஸ்லே எல்லாம் எடுத்து வெச்சுட்டியா ?

கிதா: எல்லாம் எப்பவோ ரெடிங்க.

குப்: எப்பவோ ரெடின்னு, பழைய டிபனு ?

கிதா: இப்ப பண்ணினதுதான். வந்துங்க.... இன்னிக்குக் கிரிஜா மட்டும் ஸ்கூலுக்குப் போகட்டும். கிருஷ்ணன் வீட்டிலேயே இருக்கட்டும். அவனுக்கு என்னமோ ஒரே இருமலா இருக்குது.

குப்: எப்படி இருமல் வரும் ? ராஸ்கல் சிகரெட் பிடிக்கிறானு ?

கிதா : உம்.... அய்யய்யோ ! அவனுக்கு வயசே நாலுதான் ஆவுது. நாலு வயசுலேயே சிகரெட் பிடிப்பானு ?

குப்: சொல்ல முடியாது. நாலு வயசிலே எங்கப்பா சிகரெட் புடிச்சு நான் பார்த்திருக்கேன் !

கிதா: என்னங்க சொல்றீங்க ?

குப்: ஆமா ! எனக்கு நாலு வயசா இருக்கும் போது எங்கப்பா சிகரெட் புடிச்சு நான் பார்த்திருக்கேன் ! இந்தக் காலத்துப் பசங்களை நம்ப முடியாது ! ஜாக்கிரதையா இருக்கணும். ஆமாம்.... கிரிஜாவுக்கு எப்ப பர்த்டே ?

கிதா: நாளன்னிக்குத்தான்; எப்படி வளர்ந்துட்டா பார்த்தீங்களா?

குப்: ஆமாம்.... ஆமாம்... அவளுக்கு வேறே கல்யாணம் பண்ணி வைக்கணும் ! இரண்டு பசங்களைப் பெத்துக்கிட்டு அந்தக் கவலையே பெரிய கவலையாப் போச்சு. பெண்ணுக்குக் கல்யாணம்னு என்ன சும்மாவா ?

கிதா : இப்பவே என்ன கவலே? அவளுக்கு வயசு ஆறுதானே ஆவுது ?

குப்: இப்பவே பிடிச்சுப் பணம் சேர்க்க வேண்டாமா ? மாசம் நானூறு ரூபா வருது. என்ன பண்ணப் போறோமோ ? சரி. அவ பிறந்த நாளுக்கு என்ன பண்ணப் போறே ?

கிதா: என்ன பெரிசா பண்ணப் போறோம்? வழக்கம்போல ஒரு புதுப் புடவை, பாவாடை அவ்வளவுதான்.

குப்: புடவை எதுக்கு? ஆறு வயசுலே புடவையா ?

கிதா: புடவை எனக்கு, பாவாடை அவளுக்கு! அவ பிறந்த நாளுக்கு வாங்கறது தானே எனக்குப் புடவை ?

குப்: சரி... சரி... ஆபீசுக்கு டைம் ஆறது. நான் போறேன். கதவைத் தாழ்ப்பாள் போட்டுக்க.

கிதா: தினம் சொன்னாத்தான் எனக்குத் தெரியுமா ? நான் ஜாக்கிரதையாகத்தான் இருப்பேன். நீங்க ஆபீசுக்குப் புறப்படுங்க.

குப்: ஏதாவது லெட்டர் வந்தா நீ கவரைப் பிரிக்காதே. இப்பத்தான் பேப்பர்லே படிச்சேன். ஒருத்தன் வீட்டுக்கு போஸ்ட்லே கவர் வந்திருக்குது. கவரைப் பிரிச்சுப் பார்த்தா..... தேள்! ஜாக்கிரதை !

கிதா: சரி..... கவர் ஏதாவது வந்தா கையிலே ஒரு கம்பை எடுத்துக்கிட்டு, தேளை அடிக்கத் தயாராப் பிரிக்கிறேன்.

குப்: கலாட்டா பண்ணுதே ! நமக்கேன் வம்பு? கவர் வந்தா போஸ்ட்மேனையே பிரிச்சுத் தரச் சொல்லு !

கிதா: யாரோ வராங்க....

(பாதர் அருமைநாயகம் வருகிறார்)

அரு: குட் மார்னிங்... என் பேர்....

குப்: ஃபாதர் அருமைநாயகம்தானே நீங்க ?

அரு: ஆமாம்.... எப்படித் தெரியும் ?

குப்: பேப்பர்லே போட்டோப் பார்த்தேன் ! உங்க மேலே கேஸ். அதுலேகூட முப்பது நாள் வாய்தா.

அரு: ஆமாம்; நான்தான். அந்தக் கேஸ் விஷயமா கொஞ்சம் பேசத்தான் இங்கே வந்திருக்கேன்.

குப்: கேஸ் விஷயமா ? என்கிட்டேயா ? எனக்கு அந்தக் கேஸைப் பத்தி என்ன தெரியும்? நீங்க ஏதோ தப்பு அட்ரஸுக்கு வந்திருக்கீங்க. என்பேர் குப்புசாமி.

அரு: உங்க ஒய்ப் மிஸஸ். குப்புசாமி !

குப்: இவதான். இவ பேரு உங்களுக்கு எப்படித் தெரியும் ?

அரு: நான் பேரைச் சொல்லலியே? மிஸஸ் குப்புசாமின்னுதானே சொன்னேன் !

குப்: ஆமாம், ஆமாம்! நான் மிஸ்டர் குப்புசாமி. என் ஒய்ப் மிஸஸ் குப்புசாமி! அவ பேரு உங்களுக்கு எப்படித் தெரியும் ?

அரு: கேள்விப்பட்டேன்!

குப்: கிதா ! உன்னைப் பத்தி ஊரெல்லாம் பேசிக்கறாங்களா ?

அரு: உங்க ஒய்ப் கிட்டத்தான் இந்த வழக்கு சம்பந்தமா சில விஷயங்கள் தெரிஞ்சுக்கணும்.....

குப்: என் ஒய்ப்புக்கு ஒண்ணும் தெரியாது. எனக்குப் பயமா இருக்கு. என்ன பேசறீங்க நீங்க ? நான் ஏ. ஜி. ஆபீஸ்லே கிளார்க். எனக்கும் என் ஒய்ப்புக்கும் ஒண்ணும் தெரியாது... எனக்குப் பயமா இருக்கு....

அரு: பயப்பட ஒண்ணுமே இல்லே மிஸ்டர் குப்புசாமி !

குப்: என் பேர் உங்களுக்கு எப்படித் தெரியும் ?

அரு: நீங்களே சொன்னீங்களே....

குப்: நான் ஒரு மடையன். எல்லார்கிட்டேயும் எல்லாம் சொல்லிடறேன்! எனக்குப் பயமா இருக்கு.

அரு: மிஸ்டர் குப்புசாமி ! உங்க ஒய்ப் ஜனவரி மாசம் முப்பதாம் தேதி சாயங்காலம் சுமார் ஆறு மணிக்கு.....

குப்: இல்லே.... ஜனவரி முப்பது சாயங்காலம் ஆறு மணிக்குச் செத்துப் போனது மகாத்மா காந்தி ! என் ஒய்ப் இல்லே! அது தான் இதோ இருக்காளே !

அரு: இல்லே..... அன்னிக்கு, அந்த டைம்லே கிதா ஒரு டாக்ஸி — எம். எஸ். எக்ஸ் 4080 நம்பர் — வண்டியிலே போனாங்களான்னு தெரியணும்.

குப்: கிதா இவர் என்ன சொல்றார் ? டாக்ஸி......

கிதா : அதுதானே எனக்கும் தெரியலே ! நான் எப்போ டாக்ஸியிலே போனேன் ?

குப்: பார்த்தீங்களா ? டாக்ஸியிலே எல்லாம் என் ஒய்ப் போகாது சார் !




கல்கத்தாவில் ஜனாதிபதி கிரிக்கெட் பந்தயம் பார்க்க வந்தபோது அவரோடு எழுபத்தைந்து பேர் உள்ளே வந்தனர். அவர் திரும்பியபோது வந்தவர்களில் முக்கால்வாசிப் பேர் திரும்பவில்லை!

ஸ்டேட்ஸ்மன் - பாலி

---

அரு: கொஞ்சம் நினைவுபடுத்திச் சொல்லுங்கம்மா ! ஒரு மனுஷனோட எதிர்காலமே நீங்க சொல்ற பதில்லேதான் இருக்குது.

கிதா: நான் இதுவரை டாக்ஸியிலே போனதில்லையே. ஒரு நாளாவது டாக்ஸிலே ஏறினது இல்லையே.

குப்: அதுதானே ? லேடீஸ் கிளப்புக்குக் கூட நான் ஸ்கூட்டர்லே அழைச்சுக்கிட்டுப் போவேன். ராத்திரி பத்து மணி ஆனாலும் நான்தான் திருப்பிக் கூட்டிக்கிட்டு வருவேன்.

கிதா: ஆமாம்; இவர் ஸ்கூட்டர்லேதான் போவேன். நான் டாக்ஸியிலே போனது கிடையாது.

குப்: என் ஒய்ஃப் அந்த மாதிரி தப்பா நடந்துகிட்டது கிடையாது ஸார் !

அரு: ஒரு வேளை நான் தப்பா இங்கே வந்துட்டேனான்னு எனக்குத் தெரியலே. ஆனா டாக்ஸியிலே போறதை இவ்வளவு பெரிய தவறு ஏன் நீங்க இரண்டு பேரும் நினைக்கிறீங்கன்னு எனக்குப் புரியலே.

குப்: டாக்ஸி ட்ரைவர்.... அவன் நமக்குத் தெரியாதவன் ! அவனோட ஒரு பொம்பளை எப்படித் தனியா தைரியமாப் போக முடியும்?

கிதா: ஐய்யோ ! அது எப்படி முடியும் ? நான் போனதில்லேம்மா !

அரு: என்னை மன்னிச்சுடுங்க. ஏதோ தப்பு செய்யறேனோன்னு எனக்குப் பயமா இருக்கு. நான் வரேன் மிஸ்டர் குப்புசாமி.

குப்: உங்க கேஸுக்கும் டாக்ஸிக்கும் என்ன சம்பந்தம் ? யாரோ ஒரு பெரிய பணக்காரர் — ஆரோக்கியசாமி மகன் — அவனைக் கொன்னுட்டவனைத்தானே நீங்க காப்பாத்தி வெச்சிருக்கீங்க? , அதுக்கும்.... ஓ... அவன் டாக்ஸி டிரைவர் இல்லே ? ஐயய்யோ! அந்த டாக்ஸியிலேயா என் ஒய்ப்... ஆ! இது உங்களுக்கே நல்லா இருக்கா ?

அரு: என்னை மன்னிச்சிடுங்க. நான் வரேன். (வெளியே போகிறார்)

குப்: கிதா ! என்னது இது ? டாக்ஸி ?

கிதா: அதுதானே எனக்கும் தெரியலே ?

குப்: உன் பேர் எப்படி அவருக்குத் தெரியும் ?

கிதா: நான் என்ன கண்டேன் ? நீங்க கிதான்னு கூப்பிட்டுக்கிட்டிருக்கும்போது அவர் வந்திருப்பார். காதிலே விழுந்திருக்கும்.

குப்: கரெக்ட் ! இருக்கலாம், இருக்கலாம் ! இனிமே உன்னைப் பேர் சொல்லியே நான் கூப்பிடப் போறதில்லே ! ஏய்... ஏய்னு வேன் ! அவ்வளவுதான்.

கிதா: அப்புறம் தெருவிலே எவனாவது ஏய்.... ஏய்னு மாடு ஓட்டினா என் பேர் அவனுக்கு எப்படித் தெரியும்னு கேப்பீங்க!

குப்: நான் என்ன அவ்வளவு சந்தேகப் படறவனா ? நான் என்ன முட்டாளா ? ஆமா, இந்த ஃபாதர் ஏன் எல்லோரையும் விட்டுட்டு உன்னை வந்து விசாரிக்கிறார் ?

கிதா: நான் நினைக்கிறேன், கேஸ்லே மாட்டிக்கிட்டதுலே அவருக்குச் சித்தப் பிரமை பிடிச்சிருக்குன்னு. ஒவ்வொரு வீடாப் போய், நீ டாக்ஸியிலே போனியா ? நீ டாக்ஸியிலே போனியான்னு கேப்பார்னு நினைக்கிறேன்.

குப்: சித்தப் பிரமை என்கிறாயா? இருக்கலாம். நீ டாக்ஸியிலே போகலேயே?

கிதா: சத்தியமா போகலே!

குப்: அதானே.... நீ போய் டாக்ஸிலே ஏறுகிறதாவது? பின்னே அவரு ஏன் இங்கே வந்து கேட்டாரு ?

கிதா: அவரைத்தான் கேக்கணும். எனக்கென்ன தெரியும் ?

குப்: சித்தப் பிரமைன்னியே.... இருக்கலாம். தாடி மீசையைப் பார்த்தா அப்படித் தான் இருக்கு !

கிதா: அவரேதான் நான் தப்பா வந்திருக்கலாம்னு சொன்னாரே !

குப்: கரெக்ட்.... கரெக்ட்... அவரேதான் சொன்னாரே ! இல்லே.... உன் பேரு அவருக்கு எப்படித் தெரியும்னு...

கிதா: நீங்கதான் அவர் எதிரே கூப்பிட்டீங்களே.....?

குப்: கரெக்ட் ! ரொம்ப கன்ஃப்யூஷனா இருக்குது. நீ டாக்ஸிலே போகலே..... இல்லேயா ?

கிதா: உங்க மேலே சத்யமா இல்லே.

குப்: வழக்கமா புள்ளைங்க மேலே சத்யம் வெப்பே, இப்ப என் மேலே சத்யம் வெக்கிறயே ஏன் ?

கிதா: சரி.... நம்ப பசங்க மேலே சத்யமா நான் டாக்ஸியிலே போகலே.

குப்: சரி... நீ பொய்யா சொல்லப் போறே ? நான் ஆபீஸ் புறப்படட்டுமா? டிபன் எல்லாம் இதுலே இருக்குது இல்லே ? வெரிகுட் ! நான் வரேன்!

(போய்த் திரும்பி வருகிறான்)

குப்: இல்லே.... நீ....

கிதா: சத்தியமா டாக்ஸிலே போகலேங்க!

குப்: சரி நான் வரேன்.

கிதா: என்னங்க, ஃபாதருக்கு ஒரு லெட்டர் எழுதி வச்சிருக்கேன். அதைப் போகச் சொல்லு போஸ்ட் பண்ணிடறீங்களா?

குப்: கிதா! என்னது இது ? இப்பத்தான் ஃபாதர் வந்து விசாரிச்சுட்டுப் போனார். நீ அவருக்கு லெட்டர் எழுதறே ? என்ன இதெல்லாம் ?

கிதா: ஐயோ! ஐயோ ! எங்கப்பாவுக்கு லெட்டர் எழுதி வச்சிருக்கேன். அதைச் சொன்னேன்.

குப்: ஓ! உங்கப்பா ஃபாதரா?

(தொடரும்)

# ஜலதோஷம் ஒழிக




## காப்பது கைகண்ட ஆறு மருந்துகளின் கலவையான

# ரபெக்ஸ்




வலுவாகத் தேய்ப்பதற்கான ஜலதோஷ நிவாரணி—ஜலதோஷத்தை அதி விரைவில் தணித்திட-அடைபட்ட மூக்கைத் திறக்க. மார்பிலுள்ள நெரிசலைக் கரைக்க. உடம்பிலே கதகதப்பூட்ட — தனிப்பட உருப்பெற்றது.

20 கிராம், 65 கிராம் புட்டிகளிலும், 6 கிராம் டப்பியிலும், வருபவை

**இலவச** பால் பேனா*... 20 கிராம் புட்டி வாங்கும்போது.

everest/921/ACW-tm

கதாநாயகனை முழுக்க முழுக்க நல்லவனாகக் காட்டி, கடைசிக் காட்சி வரையில் அவனை வல்லவனாகவும் காட்டிச் சுபமாக முடிக்கப்பட்டிருக்கும் படம் கலோசனா பிக்சர்ஸின் 'அன்பு ரோஜா'.

போலீஸ் அதிகாரி முத்துராமனுக்குக் குற்றவாளியைக் கண்டு பிடிக்கப் போன இடத்தில் ஒரு தந்தையின் அன்பும் தங்கையின் பாசமும், கடைசியில் ஒரு பெண்ணின் காதலும் கிடைக்கின்றன. அப்புறம் என்ன? அன்பு ரோஜாவான கதாநாயகன் பாடு ஒரே குஷிதான். தன்னை எதிர்த்த போக்கிரிகளை யெல்லாம் அடித்து நொறுக்கி அமர்க்களம் பண்ணுகிறான்.

இரட்டை வேட மோகம் இந்தப் படத்தில் முத்துராமனையும் பலி கொள்கிறது.

எந்தவிதமான 'சஸ்பென்'சும் இல்லாமல் சொல்லி வைத்த மாதிரி எல்லாச் சம்பவங்களும் அமைந்து விட்டபடியால் படம் சப்பிட்டு விட்டது.

லதா, கவர்ச்சிக் கன்னியாகத் தோன்றிக் கவலையில்லாத கதாநாயகியாக நடிக்கிறார். சிறுவயதிலிருந்தே நெருங்கிப் பழகிய தன் அத்தை மகளைப் போலவே தோற்றமுள்ள வேறொருத்தனை ஒரு பெண்ணால் அடையாளம் கண்டு கொள்ள முடியாதா என்ன? யாருக்குக் காது குத்துகிறார்கள்!

நல்ல மனங்கொண்ட ஒரு போலீஸ் அதிகாரி தன்னால் தண்டனையடைந்து சிறை சென்ற குற்றவாளிகளின் குடும்பங்களைத் தன் வீட்டுக்கு அழைத்து வந்து தன் குடும்பத்தோடு சேர்த்துக் கொள்வதை மிகவும் புதுமையான சம்பவமாகக் கொள்ள வேண்டும் என்று தயாரிப்பாளர்கள் நினைத்தால் எனது ஆழ்ந்த அனுதாபங்கள்!

போதாக்குறைக்கு நான்கு வில்லன்களும், வெகுவிரைவில் மனம் மாறிக் கதாநாயகனுக்கு அடிபணிந்து விடுவதாக ஓர் அசட்டுக் கற்பனை வேறு!

'அன்பு ரோஜா' மணம் கமழ்வதற்குப் பதில் முள்ளாகக் குத்துகிறது!






## "அவளும் பெண்தானே"



இழுக்கி விழுந்த பெண்ணுக்கு வாழ்வளிக்க முற்பட்டவனின் கதை 'அரங்கேற்ற'மாகி யிருக்கிறது.

வாழ்க்கையில் சந்தர்ப்ப வசத்தினால் தவறியவர்களை, நம் சமூகம் வாழவிடுவதில்லை என்பதுதான் திரைக்கதையின் தத்துவம். களங்கமடைந்த கதாநாயகிக்குத் துணிந்து வாழ்வளித்த கதாசிரியர், சமூக நெறிக்குப் பயந்து அந்தப் பாத்திரத்துக்குத் தற்கொலையின் மூலம் தீர்ப்பளித்து விடுகிறார். ஐயோ, பாவம்!

வழுக்கி விழுந்தவளுக்கு வாழ்வளிக்க முன் வந்து அருமையாக நடித்திருப்பவர் முத்துராமன்.

புதுமுகம் சுமித்திரா எடுத்த எடுப்பிலேயே வெற்றி பெற்று விடுகிறார். ஒரு கயவனுக்கு 'டிமிக்கி' கொடுத்து ரயிலிலிருந்து தப்பி ஓடி இன்னொரு கயவனிடம் சிக்கிச் சீரழிய நேர்ந்தபோது சுமித்ராவின் பார்வை நம்மைப் படாத பாடு படுத்துகிறது.

எம். ஆர். ஆர். வாசு அபலைப் பெண்களை ஏமாற்றி அவர்களை வஞ்சித்துப் பிழைக்கும் பாத்திரமானாலும் நடிப்பில் நம்மை வஞ்சித்து விடவில்லை.

சகஸ்ரநாமமும், எம். என். ராஜமும் தங்களது பழுத்த அனுபவ நடிப்பினால் படத்துக்குக் களை கட்டச் செய்கின்றனர். பண்டரிபாய், மகன் விரும்பி மணந்து கொண்டிருக்கும் பெண் நெறி தவறியவள் என்று தெரிந்த பிறகும் அவளுக்கு வாழ்வளிக்க முன்வந்த மாமியாராக வருகிறார். உருக்கமாகவும் சுருக்கமாகவும் தம் உணர்ச்சிகளை வெளிப்படுத்தி நடித்திருக்கிறார்.

கதை, வசனம், டைரக்ஷன் ஆகிய மூன்று பொறுப்புக்களை ஏற்றிருக்கிறார் துரை. அவற்றுள் வசனத்துக்கு நூற்றுக்கு நூறு மார்க் போடலாம்.

ஸ்ரீ பாண்டுரங்கா புரொடக்ஷன்ஸாரின் ''அவளும் பெண்தானே'' துணிந்து புனைந்த சித்திரம். அது 'ஏ' சர்ட்டிபிகேட் வழங்கப்பட்ட படம். 'ஏ ஒன்' சர்டிபிகேட்டை ரசிகர்கள் வழங்க நடிப்பும் டைரக்ஷனும் துணை நிற்கின்றன.

-காந்தன்

மனவாசியே கைவாசி
கைவாசியே கைராசி

தமிழில் முதலாவது நகைச்சுவைப் பத்திரிகை, 1886ல் தொடங்கிய 'மகா விகட தூதன்'. அந்தத் தூதனின் மகா விகடத்தை மகாஜனங்கள் விரும்பாததாலோ, அதை மூக்காலணு கொடுத்து வாங்க மூக்கால் அழுததாலோ, அது நீடித்து நடக்க முடியாமல், தானாகவே எம தூதனிடம் அடைக்கலம் புகுந்தது.

அதற்கு நேர்ந்த கதியைக் கண்டு பயந்துதானு என்னவோ, வெகு காலம் யாரும் நகைச்சுவைப் பத்திரிகை போடத் துணியாமலிருந்து, இறுதியில் நாற்பது ஆண்டுகளுக்குப் பிறகு, ஒரு வீரசைவர் துணிந்தார். அவருடைய பெயர், அவரே அடைமொழிகளுடன் அறிவித்துக் கொண்டபடி, வீரசைவர் விகடகவிபூதூர் வைத்தியநாதய்யர்.



அக்காலத்தில் ''ஆனந்தபோதினி'' நல்ல செலாவணியில் இருந்தது. அந்தப் பத்திரிகைக்குப் போட்டியாகவும் அதன் பெயரைத் தழுவியும் அந்த விகடகவி தொடங்கிய பத்திரிகைதான் ''ஆனந்த விகடன்''. அந்தச் சஞ்சிகையை அவர் ''ரஞ்சிதமாகக் குஞ்சரத்தின் திருவருளை முன்னிட்டு'' 1926 மே மாதத்தில் உலவ விட்டார். —''வருடச் சந்தா ரூபா இரண்டு'' என்பதாகத்தானே அறிக்கை விடுத்து. (இட்டா பார்த்தசாரதி நாயுடுவின் குமாரர்கள் என்ற புத்தக வியாபாரிகளின் ஆதரவு அந்தச் சஞ்சிகைக்குத் தொடக்க காலத்தில் இருந்து வந்தது எனத் தெரிய வருகிறது.)

அந்தச் சஞ்சிகையின் நோக்கம் யாதெனில்:

இக்கால இளைஞர்கள் பால வயதிலேயே துர் நடவடிக்கைகளைப் பயின்று குலத்துக்கும் மதத்துக்கும் மாறுன விதமாக நடந்துகொள்கின்றனர். ஆதலால், அவ்வகையான பாவியர்கட்கு நற்போதம் புகட்டல் மிகக் கடினமானது பற்றி விகடன் இப்பத்திரிகையின் மூலமாக நன்னடக்கைகளைச் சொல்லாமல் சொல்லி நற்போதம் புகட்டுகிற முறையில் போதிக்க முன்வந்துள்ளான்... இப்பத்திரிகை மூலமாக உலகை முன்னுக்குக் கொண்டு வர எண்ணம். இதைக் கண்ணுறும் ஒவ்வொருவரும் இக்து முன்னேற்றம் அடையச் சிரத்தை எடுத்துக் கொள்வீர்கள் என்று வேண்டுகின்றனம்.

உலகத்தை முன்னேற்றுவது விகடனின் நோக்கம். விகடனை முன்னேற்றுவது வாசகர்களின் கடமை. பூதூர் வைத்தியநாதய்யர் வெளியிட்ட இதழ்களைப் பார்க்கையில் விகடனின் நோக்கத்தை அவர் விவேகத்துடன் ஈடேற்றவில்லை என்பது தெரிகிறது. ஆகவே வாசகர்களும் தமது கடமையை நாணயமாகவும், நாணயத்தாலும் செலுத்தவில்லை.

அந்தக் காலத்தில் தபால் மூலமே பத்திரிகைகளின் விநியோகம் பெரும்

# பொன்னியின் புதல்வர்

சுந்தா



முகப்புப் பக்கத்தில் பழைய விகட விநாயகரின் இடத்தில் பாரத அன்னை வீற்றிருந்தாள்.
(படம்: உத்தரா)



கல்கியை வாசன் முன் கொண்டு நிறுத்திய திரு பரலி சு. நெல்லையப்பர்.

பாலும் நடந்து வந்தது. பத்திரிகை களைத் தருவிக்க விரும்புவோர், மணி யார்டர் மூலம் முன்கூட்டியே சந்தா செலுத்தாமல், வி. பி. பி. முறையில் அனுப்பச் சொல்வது வழக்கம். அந்த வழக்கத்தின்படியே ஆனந்தவிகடனை அனுப்பி வைக்கும்படி காலணா கார்டு மூலம் எத்தனையோ பேர் கோரத்தான் செய்தார்கள். ஆனால், அவர்களில் பலர், வி. பி. பி. வந்ததும், தம் மனத்தை மாற்றிக் கொண்டதாலோ கைவசம் இரண்டு ரூபாய் பணமில்லாததாலோ அதை ஏற்க மறுத்துத் திருப்பி அனுப்பினார்கள். அப்படிப்பட்டவர்களை விகடகவி ஏசியும் கண்டித்தும் ஒவ்வொரு இதழிலும் ஏதாவது எழுதுவார். உதாரணமாய், 1926 நவம்பர் இதழில் அவ்வையார் பாட்டின் போலிப்பு:

கொடியது கேட்கின் கூறுவேன் கேளீர்
கொடிது கொடிது கூத்தி கொடிது
அதனிலுங் கொடிது அற்பர்கள் நேயம்
அதனிலுங் கொடிது அருந்துதல் மதுவை
அதனிலுங் கொடிது அன்பிலார் நேயம்
அதனிலுங் கொடிது ஆனந்த விகடனை
அனுப்பச் சொல்லி அன்றே திருப்புதல்.

இப்படியெல்லாம் கண்டிக்கக் கண்டிக்க அக் கொடிய வழக்கம் கூடிற்றே தவிர குறையவில்லை. சீற்றம் கொண்ட விகடகவி, வி.பி.பி. யைத் திருப்பி அனுப்புவோரின் பெயர்களைத் தமது பத்திரிகையில் அச்சிட்டு அவமானப்படுத்தப் போவதாகப் பயமுறுத்தினார். நல்லவேளையாக அப்படி அவர் செய்யாமல் அவர்களைத் தப்பவிட்டுத் தாமும் தப்பினார்.

பூதூர்ப் பெரியவர் வி. பி. பி. மூலமான பத்திரிகைத் தொழிலில் பண நஷ்டமும், மனக் கஷ்டமும் அடைந்து கொண்டிருந்த அதே சமயத்தில், அவருக்கு மாறாக, எஸ். சீனிவாசன் என்ற பெயரை எஸ். எஸ். வாசன் என்பதாகச் சுருக்கிக் கொண்ட இளைஞர், அதே வி. பி. பி. மூலமாய் மக்களுக்கு விருப்பமான பொருள்களை விற்றுப் பண லாபமும் மன ஊக்கமும் அடைந்துகொண்டிருந்தார்.

கல்கிக்கு நாலு வயது இளைஞரான வாசன், அவரைப் போலவே தஞ்சாவூர் ஜில்லாக்காரர். முன்னவர் பிறந்த ஊர் நமக்கு ஏற்கனவே தெரிந்த மண்ணியாற்றின் கரையில் உள்ள புத்தமங்கலம். பின்னவரின் பிறந்த ஊர் முள்ளியாறு ஓடும் திருத்துறைப்பூண்டி. கல்கி சென்னைக்கு வந்ததற்குக் கிட்டத்தட்ட அதே வேளையில் வாசனும் வந்தவர்.

பச்சையப்பன் கல்லூரியில் சேர்ந்து படிப்பதற்காகச் சென்னைக்கு வந்த வாசன், தமது அருமைத் தாய்க்குப் பாரமாய் இருக்க விரும்பாமல் படிப்பை அரைகுறையாய் நிறுத்திக் கொண்டு சொந்தமாய்ச் சம்பாதிக்கலானார். கல்லூரியில் படித்த சிறிது காலத்தில், அதற்கு உள்ளே அவர் கற்றதை விட வெளியே கற்றது தான் அதிகம். மாலை வேளைகளிலும் விடுமுறை நாட்களிலும் அவர் மூர்மார்க்கெட்டுக்குச் சென்று, பழைய புத்தகக் கடைகளைக் குடைந்து வித விதமான புத்தகங்களைப் படித்தார். வாழ்க்கையில் முன்னேறுவது எப்படி, விரைவிலே

நெல்லையப்பரின் துணையுடன் வாசன் எதிரே கல்கி வந்து நின்றார்.

பொருள் ஈட்டுவது எப்படி, மக்களை வசியம் செய்வது எப்படி என்பதை விவரிக்கும் நூல்கள் அவரைப் பெரிதும் கவர்ந்தன. அமெரிக்காவிலும், இங்கிலாந்திலும் பரம ஏழைகளாய் இருந்த சிலர், கடுமையாய் உழைத்தும், விடா முயற்சி செய்தும் புதுப் புது உத்திகள் மூலம் மக்கள் விரும்புவதைக் கொடுத்தும், வெற்றிச் செல்வர்களாயும், செல்வச் சீமான்களாயும் ஆன வரலாறுகளை அவர் படிக்கப் படிக்கத் தாமும் ஏன் அவ்வாறு ஆகக் கூடாது, ஆக முடியாது என்று எண்ணினார். அவர் வசித்த ஜார்ஜ் டவுனில், அவர் கண் முன்னாலேயே பலர் பலவித வியாபாரங்களில் ஈடுபட்டுக் கொள்ளையாய்ப் பணத்தை அள்ளுவதைக் கண்டார். வெளிநாடுகளில் உள்ள வாய்ப்புக்களில் சில இங்கேயும் உண்டு. அந்தப் புத்தகங்களில் படித்தவை கட்டுக் கதைகள் அல்ல.

அந்தக் காலத்தில் இங்கிலாந்திலிருந்தும் ஜப்பானிலிருந்தும் கப்பல் கப்பலாய் வந்திறங்கிய பொருள்களில், ''ஷாப்புச் சாமான்கள்'' என்று மக்கள் குறிப்பிட்ட சோப்பு, சீப்பு, கண்ணாடி, ஊசி, பாசி, பொம்மை, பந்து வகையறுக்கள், சென்னையிலும் பெரிய நகரங்களிலும் மட்டுமே நேராகக் கடைகளில் கிடைத்தன. சிறிய நகரங்களிலும், கிராமங்களிலும் அவற்றை விற்பதற்காகச் சென்னை வியாபாரிகள் சிலர் அந்த ஷாப்புச் சாமான்களின் வர்ணனைகளும் படங்களும் அடங்கிய பட்டியல்களைப் போட்டு விளம்பரம் செய்து வி. பி. பி. வியாபார முறையைக் கையாண்டார்கள். அவ்வித வியாபாரிகளில் ஒருவரானார் வாசன்.

அந்த வியாபாரத்திலும் அவர் ஒரு தனி வழியை மேற்கொண்டு, ஒரு ரூபாய்க்கு 144 பொருள்கள் அடங்கிய பொட்டணங்களை விற்கத் தொடங்கினார். நல்ல லாபம் கொடுத்த அந்த வியாபாரத்துடன் புத்தக வியாபாரத்தையும் சேர்த்துக் கொண்டார். அக்காலத்தில் வெளியாகிக் கொண்டிருந்த புத்தகங்களுக் கெல்லாம் குறிப்பாகத் துப்பறியும் நாவல்கள், மர்மக் கதைகள் முதலியவற்றுக்குக் கவர்ச்சியாகப் பட்டியல் போட்டு விற்றார்.

வாசனே ஆங்கிலப் புத்தகங்கள் சிலவற்றைத் தமிழில் தழுவி எழுதி வெளியிட்டார். அவற்றில் ஒன்று 1927 தொடக்கத்தில் வந்தது. நிறைய விற்கக் கூடியதான அந்தப் புத்தகத்தின் விளம்பரத்துக்கென வாசன் தேர்ந்தெடுத்த இதழ்களில் ஒன்று ஆனந்த விகடன். அதன் 1927 ஆகஸ்டு இதழில் வருவதற்கென, ஜூலை மாதத்தில் வாசன், தமது விளம்பரத்தைக் கொடுத்துப் பணமும் கட்டி விட்டார். ஆகஸ்டு இறுதிவரை அம்மாதத்துக்கான இதழ் வெளிவரவில்லை. என்ன ஆயிற்று என்று வாசன் விசாரிக்கச் சொன்னார். பண முடைதான் காரணம் என்று விகட கவி துக்கப்பட்டுச் சொல்லி, சந்தாவைப் புதுப்பிக்காத அன்பிலாரையும், வி. பி. பி. யை ஏற்காமல் ஏமாற்றும் அயோக்கியர்களையும் திட்டி நொறுக்கினார். எப்படியோ சமாளித்து அடுத்த மாதத்தில், இரண்டு மாதங்களுக்கும் சேர்த்துக் கூட்டிதழ் ஒன்றை வெளியிடப் போவதாகவும் அதில் வாசனின் விளம்பரம் இடம் பெறும் என்றும் அவர் உறுதி கூறினார். அப்படியே ஒரு கூட்டிதழ் வாசனின் முழுப் பக்க விளம்பரத்துடன் வெளிவரவே செய்தது.

அதற்கு நேர் ஐந்தாவது மாதமான 1928 பிப்ரவரியில், ஆனந்த விகடன் எஸ். எஸ். வாசனின் பத்திரிகையாக வெளிவந்தது.

அந்தக் கைமாற்றம் எப்படி நிகழ்ந்தது என்பதை விகட கவியை நேரில் அறிந்தவர்கள் சொன்னது, அக்கால ஆனந்த விகடன் இதழ்கள், கொஞ்சம் ஊகம் ஆகியவற்றைக்கொண்டு சொல்ல முடியும். ஆகஸ்டு — செப்டம்பர் கூட்டிதழுக்குப் பிறகு அக்டோபர், நவம்பர் இதழ்கள் வந்தன. ஆனால் டிசம்பர் இதழ் அம்மாத இறுதிவரை வரவில்லை. ஏன் என்று தற்செயலாகவோ, வேண்டும் என்றோ, விகட கவியை வாசன் கண்டு விசாரித்த போது, முன்னிலும் அதிகமாய் அவர் சோகத்தையும் சினத்தையும் கொட்டினார். அவருக்கு வாசன் ஆறுதல் கூறியதுடன், அவருடைய பத்திரிகை அப்படித் திண்டாடுவதற்குக் காரணங்கள் என்னென்ன என்பதையும், என்னென்ன செய்தால் அதை நேர் நடைபோடச் செய்யலாம் என்பதையும் பெரிய அனுபவசாலி போல் தெரிவித்தார். அதை விகட கவி, ''ஒரு சின்னப் பையனின் அதிகப் பிரசங்கம்'' எனக் கருதவில்லை. ஏனெனில் வி.பி.பி. வியாபாரத்திலும் புத்தக வெளியீட்டிலும் வேகமாய் முன்னேறிக் கொண்டிருந்த இளைஞர் அவர். ஆகவே, வாசன் சொன்ன யுக்திகளை யெல்லாம் அவர் பொறுமையுடன் கேட்டுக்கொண்டிருந்து விட்டு, ''உங்கள் யோசனைகளை நடத்தி வைக்க நீங்களே எனக்கு உதவியாய் வேலை செய்தால் என்ன?'' என்று கேட்டார். அதற்கு வாசன், தாம் சொந்தத் தொழிலின் பெருமையைக்



• முகப்பருவா? • அம்மைத்தழும்பா?
• கண்ணைச்சுற்றி கருமைப்படர்ச்சியா?
கை,கால் வேர்வை அதிகமா?
உடன் நிவாரணம் பெற சிறந்தது.

ஆதி சித்தர்
# சர்ம ரஞ்ஜினி பொடி

• சிறந்த பலன் பெற
ஆதி சித்தர் ராஜ பிருங்காமலக தைலத்துடன்
உபயோகிக்கவும்.

ஆதி சித்தர் வைத்தியசாலை,
ஆபிரகாம் பண்டிதர் ரோடு, தஞ்சாவூர்.

---



பலத்திற்கும்
ஆரோக்கியத்திற்கும்
பண்டிட் D.கோபாலாசார்லுவின்
# ஜீவாம்ருதம்

1898 முதல் பிரசித்தி பெற்றது

ஆயுர்வேதாஸ்ரமம் (லிமிடெட்) சென்னை-17.

---

அவள்
எழிலின்
ரகசியம்
# ஐடெக்ஸ்
அழகு சாதனங்கள்







ARAVIND
LABORATORIES
MADRAS-33



கண்டிருப்பதாயும், பிறரிடம் வேலை பார்க்க மனமில்லை என்றும் கூறினர்.

''அப்படியானல் நீங்களே இதை ஏற்று நடத்தத் தயாரா?'' என்று வைத்தியநாதய்யர் கேட்டார்.

''உங்கள் உரிமையை விட்டுக் கொடுக்க என்ன எதிர்பார்க்கிறீர்கள்?'' என்று வாசன் பதிலுக்குக் கேட்டார்.

விகடகவி விரல் விட்டு எண்ணிக் கணக்குப் போட்டு, ''ஆனந்த விகடன் என்பதில் எழுத்துக்கு இருபத்தைந்து ரூபாய் விதம் இருநூறு ரூபாய்'' என்று விலை கூறினர்.

''கொஞ்சம் யோசிக்க நேரம் கொடுங்கள்'' என்று வாசன் கேட்டுக் கொண்டு வீட்டை நோக்கி விரைந்தார்.

யோசிக்க நேரம் கேட்டாரே தவிர அவருக்கு அது அவசியமாய் இருக்க வில்லை. விகட கவி விலையைச் சொன்ன அக்கணமே அதை அவர் வாங்கி நடத் தத் தீர்மானித்து விட்டார். ஆனாலும் தமது அருமைத் தாயாரிடம் அனுமதி கேட்க வேண்டும்.

ஆனந்த விகடன்! எவ்வளவு அழ கான பெயர்! அவன் ஏன் தள்ளாடி நடக்க வேண்டும்? தக்க ஊட்டம் கொடுத்தால் ஆனந்தமாய்க் கூத்தாட மாட்டானா? தமது கவர்ச்சி வித்தை களைக் காட்டி ஒரு கை பார்ப்பதற்கு இதோ தானாகவே ஒரு வாய்ப்பு!

அண்ணா பிள்ளைத் தெருவில் அவ ருடைய இல்லமும், வியாபாரத் தலமு மாய் இருந்த வீட்டுக்குள் அவர் ஆனந்த நடை போட்டுச் சென்று, சற்று முன் நிகழ்ந்ததையும், தாம் செய்த தீர்மானத்தையும் அன்னை யிடம் தெரிவித்து, அவருடைய ஆசியை வேண்டினர். பல ஆண்டுகளுக்குப் பிறகு கல்கி எழுதியது போல் ''ஸ்ரீ பாலாம்பாள் அம்மாள் தமது புதல் வரிடம் அளவற்ற அன்பு கொண் டிருந்ததோடு இணையில்லாத நம்பிக் கையும் வைத்திருந்தார். புதல்வர் அதி சயமான துணிச்சலுடன் தொடங்கும் காரியங்களில் கூட அவர் குறுக்கே நின்று தடுக்க மாட்டார்.''

''பேஷாய் எடுத்து நடத்து. இதிலே நீ ரொம்பவும் சோபிதம் அடைவாய்'' என்று அவர் வாழ்த்தினர்.

விரைவிலேயே வாசன் ஆனந்த விக டனை முறைப்படி தமதாக்கிக் கொண் டார். கணக்காக அதன் மூன்றும் ஆண்டுத் தொடக்கத்திலிருந்து தம் பொறுப்பில் அது வெளியாக வேண்டும் என்று தீர்மானித்தார்.

வி.பி. பொட்டணங்களைப் பொதிந்து கொண்டே வாசன், தாமே பதிப்பிக்கப் போகும் ஆனந்த விகடன் இதழ் களுக்காகத் திட்டம் போட்டார். அதன் நோக்கம், அமைப்பு, அடக்கம் ஆகிய வற்றைப் புது விதமாய்த் திருப்ப வேண்டும் என்று தீர்மானித்தார். சொந்த அச்சு இயந்திரம் ஒன்றுக்கு ஏற்பாடு செய்தார். பெருகி விட்ட பழைய வியாபாரத்துக்கும் புதிதான பத்திரிகைக்கும், அச்சுக்கூடத்துக்கும் சேர்த்து விரிவான இடவசதி தேவை யாக இருந்ததால் தங்கசாலைத் தெரு 244 ஆம் இலக்க வீட்டுக்கு ஜாகை மாற்றிக் கொண்டார். கீழே அச்சுக் கூடமும் அலுவலகமும்; மாடியில் குடி யிருப்பு.

1928 பிப்ரவரி மாதத்தில் வாசன் வெளியிட்ட முதல் ஆனந்த விகடன் இதழ் வியக்கத் தக்கதாய் இல்லா விட்டாலும், பல மாறுதல்களையும் அபி விருத்திக்கு அறிகுறிகளையும் கொண்ட தாய் இருந்தது. முகப்புப் பக்கத்தில், பழைய விகட விநாயகரின் இடத்தில். பாரத அன்னை கொலுவீற்றிருந்தாள். அதன் அடியில் விகட கவியின் சொந் தக் காப்புச் செய்யுளுக்குப் பதிலாக, இப்போதும் தொடர்ந்துள்ள தாயு மானவரின் பராபரக் கண்ணி இடம் பெற்றது. இவற்றையும் இன்னும் சில மாற்றங்களையும் அடுத்து, புதிய ஆசிரியரின் அறிக்கை:

....சண்டு ஆனந்த விகடன் புதிய ரூபத் தில் தோன்றியுள்ளான். பாரதத் தாயைக் கரத்திலேற்றிக் கொண்டான். அவனுக்கு உழைப்பதே தன் கடமையெனக் கங்கணம் கட்டிக் கொண்டான். பாரதத் தாயின் தற் கால உண்மை நிலையை ஆனந்தன் நன்கு அறிந்து கொண்டவனாதலால் அவனுடைய முன்னேற்றத்துக்காக எந்தெந்த வழிகளில் முயற்சி செய்ய வேண்டுமோ, அவ்வழிகளில் எத்தகைய இடையூறுகள் ஏற்பட்ட போதி லும், அவைகளைக் களைந்தெறிந்து, தான் எண்ணிய எண்ணத்தை நிறைவேற்றிவைக்கச் சிறிதும் பின்வாங்க மாட்டான் என்பதை நண்பர்களுக்குச் சந்தோஷத்துடன் தெரி வித்துக் கொள்கிறோம்.

எந்த விஷயத்திலும் ஒற்றுமை இருந்தால் தான் காரியம் விரைவில் சித்தி பெறுகிறது. அதே போலச் சந்தாதார்களின் எண்ணிக்கை அதிகமாக ஆக, விகனுடைய பேச்சு எங்கும் பரவ இடம் ஏற்படும். தமிழ் நாடெங்கும் இச்சஞ்சிகை உலவ வேண்டும் என்ற கருத் துடன் இதன் சந்தாத் தொகையும் இரண்டு ரூபாயிலிருந்து ஒரு ரூபாயாகக் குறைக்கப் பட்டிருக்கிறது...

அந்த முதல் இதழில் முதன் முத லாக மார்களின் சிறு சிறு சித்திரங்கள்

தோன்றின. ''புது வாழ்வு'' என்ற தலைப்பில் பரலி சு. நெல்லையப்பர் எழுதிய கட்டுரை ஒன்று சிறப்பிடம் பெற்றது. வாசனின் ''இந்திர குமாரி'' என்ற தொடர் நாவல் தொடங்கிற்று.

பத்திரிகையின் விற்பனையைப் பெருக்குவதற்கு விலையைப் பாதியாகக் குறைத்தது மட்டும் போதாது; புது அம்சங்களைச் சேர்த்தது மட்டும் போதாது: வேறு உபாயங்களும் வேண்டும் என்று வாசன் எண்ணினார். விற்பனையைப் பெருக்கினால் மட்டும் போதாது, பெரும் பொருள் ஈட்ட வேண்டும் என்றால், அதற்கு வேறு உபாயம் செய்ய வேண்டும். இப்படியெல்லாம் யோசித்து, 1956 வரை ஆனந்தவிகடன் நடத்தி வந்த போட்டிப் பந்தயங்களை, அந்த முதல் இதழிலேயே வாசன் தொடங்கி விட்டார். பின்னால் ஆயிரக் கணக்கில் ரொக்கப் பரிசுகள் அளித்தவர், அந்த முதல் இதழில் வெளியான ''சொற்புதிர்'' போட்டிக்குப் பத்து ரூபாய் மதிப்புள்ள கடிகாரப் பரிசை அறிவித்தார். தமது பழைய வியாபாரத்துக்கான விளம்பர சாதனமாயும் புதிய பத்திரிகையை அவர் பயன்படுத்திக் கொண்டு அதில் பட்டியல்களை இணைத்து வெளியிட்டார்.

இரண்டாம் இதழிலிருந்து பாரதியாரின் பாடல்கள் ஒவ்வொன்றாய் வரத் தொடங்கின. வ. ரா., பி.ஸ்ரீ., தி. ஜ. ர. முதலியோரின் கட்டுரைகள் அடுத்தடுத்து வந்தன. இன்னும் யார் யார் எழுதப் போகிறார்கள் என்பதற்கு ஒரு குறிப்பு வெளியாயிற்று. டாக்டர் வரதராஜுலு நாயுடு, கல்யாணசுந்தர முதலியார், ராஜகோபாலாச்சாரியார், ஈ. வே. ராமசாமி நாயக்கர், ராய. சொக்கலிங்கம், ஜனாப் தாவூத் ஷா ஸ்ாஹிப்...''மேற்படியார்களின் சிறந்த கட்டுரைகள் விகடன் தாங்கி நிற்பானென்று எதிர்பார்க்கப் படுகிறது'' என்று வாசன் அறிவித்தார்.

இந்த ''மேற்படியார்கள்'' சிலரின் கட்டுரைகளை விகடன் தாங்கி நின்ற போதிலும், அவற்றில் எதுவும் அவனுடைய பெயருக்குப் பொருத்தமாக நகைச்சுவை கொண்டதாய் இருக்கவில்லை. ''எல்லோரும் இன்புற்றிருக்க'' சிரிப்பும் வியப்பும் ஊட்டக் கூடியதாக, யாரேனும் எழுத மாட்டார்களா என்று வாசன் ஏங்கிக் கொண்டிருந்தார். அவருடைய அக்காலத் தலையங்கம் ஒன்று இந்த ஏக்கத்தை வெளிப்படுத்திற்று. அதில் அவர், ஆனந்த நடராஜரும் ஆனந்த கிருஷ்ணரும், விகட விநாயகரும், நம் நாட்டுக்கு உரியவர்களாய் இருந்தும், அவர்கள், ஐரோப்பாவிலும் அமெரிக்காவிலும் கூத்தாடுவதைச் சுட்டிக் காட்டினார். அந்தத் தேசங்களின் பத்திரிகைகளில் எவ்வளவு உயர்ந்த விகடங்கள் வெளியாகின்றன என்று வியந்தார். நம் நாட்டில் ஏன் இல்லை? அந்நியர் ஆட்சியும், அதன் மூலமாக வறுமையும் சிறுமையும் காரணமோ?

இப்படி வாசன் ஏங்கிக் கொண்டிருந்த சமயத்தில்தான் (1928 ஜூலை மாதத்தில்) நெல்லையப்பரின் துணையுடன் அவர் முன்னே கல்கி வந்து நின்றார். அப்போது அவர் கல்கியை ஒரு கட்டுரை எழுதி அனுப்பச் சொன்னதும் அப்படியே கல்கி அனுப்பிய ''ஏட்டிக்குப் போட்டி'' அடுத்த மாத இதழில் வெளியானதும் ஏற்கனவே இதன் முதல் அத்தியாயத்தில் வாசனின் சொற்கள் மூலமே தெரிந்த விவரங்கள்.

அடுத்து நிகழ்ந்ததை வாசனே சொல்லட்டும்:

> முதல் கட்டுரை விகடனில் வெளிவந்து விட்டது. சன்மானமாக ஐந்து ரூபாய் அனுப்பினேன் என்று ஞாபகம். பணம் எவ்வளவு என்பதுதான் மறந்து போய்விட்டது. ஆனால், ''உங்களுடைய அடுத்த கட்டுரையை எதிர்பார்க்கிறேன்'' என்று நான் கடிதம் எழுதியதை மட்டும் இன்னும் மறக்கவில்லை.
>
> 'பூரி யாத்திரை' என்னும் தலைப்பில் அடுத்த கட்டுரை வெளியாயிற்று. இதற்குச் சன்மானம் இரட்டிப்பு ஆக்கினேன். பிறகு இருவரும் அடிக்கடி சந்தித்தோம்.
>
> (ஆனந்த விகடன் 8-9-'63)

''பூரி யாத்திரை''யைத் தொடர்ந்து ஆனந்த விகடனின் அடுத்தடுத்த இதழ்களில் ''இரவல் படிப்பு'', ''தலைகீழ்ப் பாடம்'', ''சட்டம் ஒரு கழுதை'' முதலிய கட்டுரைகள், ''ஏட்டிக்குப் போட்டி'' நூலில் உள்ள வரிசையில் வெளியாயின.

பிறகு நடந்தது, மேலே உள்ள மேற்கோளின் தொடர்ச்சியில் இருக்கிறது:

> சில மாதங்களில் 'ஆனந்த விகடன்' ஆசிரியராகவே அவரை ஆக்கிக் கொண்டேன். அப்பொழுது அவர் திருச்செங்கோடு காந்தி ஆசிரமத்தில் ராஜாஜிக்குத் துணையாயிருந்தார். ராஜாஜி இதற்கு அனுமதி கொடுத்தார்.
>
> சிறந்த எழுத்தாளர் ஒருவர் தமிழ் நாட்டுக்குக் கிடைத்தார் என்று அவரை ஆசிரியராக அமைத்த விஷயத்தில் ஆனந்தம் அடைந்தேன்.

(இந்த அத்தியாயத்தில், வாசனின் இளமை வாழ்க்கை பற்றிய குறிப்புகளுக்குப் பெரும்பாலும் ஆதாரம், அவர் 1969 ஆகஸ்டில் மறைந்ததை அடுத்து, ஆ.வி.யில் வெளியான கட்டுரைகள்)

(தொடரும்)

### தலைவர் தரிசனம்·4

# மு.கருணாநிதி

சொல்பவர்: **தையற்கலை சுந்தரம்**



தையற்கலை சுந்தரம் வெள்ளி விழா மலர் வெளியீட்டின்போது, முதல்வர், திரு சுந்தரத்துக்கு மோதிரம் அணிவித்துப் பாராட்டுகிறார்.

**வ**ருடம் 1950–51 என்று நினைக்கிறேன். தேதி சரியாக நினைவில்லை. அன்று, காலஞ்சென்ற அண்ணா அவர்கள் என்னையும் மற்றொரு அன்பர் சி. வி. ராஜகோபால் அவர்களையும் அழைத்துக்கொண்டு காஞ்சிபுரத்துக்குக் கிளம்பினார். கார் ஓட்டியிடம் முதலில் வண்டியைத் தியாகராய நகர்ப் பகுதிக்கு விடச் சொன்னார்.

தியாகராய நகரில் கார் ஓர் 'அவுட் ஹவுஸ்' முன்னால் நின்றது. அங்கேதான், அன்றைய இளைஞரும், இன்றைய முதல்வருமான திரு மு. கருணாநிதி தங்கித் தம் எழுத்துப் பணியில் ஈடுபட்டிருந்தார் என்று அப்புறம் நான் தெரிந்து கொண்டேன். அவரை நெருங்கிப் பழகும் வாய்ப்பு அன்று அறிஞர் அண்ணா அவர்கள் முன்னிலையிலேயே முதல் தடவையாக எனக்குக் கிட்டியது.

''என்ன தையற் கலை!'' என்றுதான் கலைஞர் அப்போதெல்லாம் என்னை வரவேற்பார்; கூப்பிடுவார்.

''ஓர் இரவு'', ''நல்ல தம்பி'' ஆகிய இரு திரைப் படங்களுக்குக் கதையும் வசனமும் எழுதித் திரையுலகில் புதுமையைச் செய்து காட்டியவர் அமரர் அண்ணா. அதைத் தொடர்ந்து கருணாநிதி அவர்கள் 'மந்திரி குமாரி', 'பராசக்தி' ஆகிய திரைப்படங்கள் மூலம் தமிழகத்தில் புதிய எழுச்சியையே தோற்றுவித்தார். 'பராசக்தி' மூலம் இவர் எழுத்தின் வேகம் ஒரு பரபரப்பையே ஏற்படுத்தியது. 'மனோகரா' வசனங்களின் சொல்லாற்றலைத்தான் யாரால் மறக்க முடியும்?



கருணாநிதி செய்தனவற்றை வாழ்த்தி, செய்ய வேண்டுவனவற்றை உணர்த்திய அறிஞர் அண்ணா நினைவு நாள் : பிப்ரவரி, 3.

இவருடைய நாடகங்கள் நடைபெறாத நகரங்களே அந்த நேரத்தில் தமிழகத்தில் இல்லை என்றுகூடச் சொல்லலாம். அந்த நாடகங்கள் சிலவற்றில் தம்மையே ஒரு பாத்திரமாகவும் அமைத்துக் காட்டிச் சிறப்புப் பெற்றார்.

தி. மு. க.வின் ஆரம்ப காலத்திலிருந்தே இவருடைய கருத்துக்கு மாறுபட்டவர்கள் பலர் அக்கட்சியிலேயே இருந்ததுண்டு. காலம் செல்லச் செல்ல இவர் தம் வலிமையை நன்கு வளர்த்துக் கொண்டார். ஒருவர் பின் ஒருவராக அவர்களைத் தோல்வியடைய வைத்து ஒதுக்கினார். எதிர்ப்பிலே பிறந்து, எதிர்ப்பிலே வளர்ந்து, தலைவராகவும், தமிழகத்தின் முதல்வராகவும் ஆன பெருமை இவருக்கு உண்டு. இத்தகைய வெற்றிக்கெல்லாம் காரணம் இவருடைய அயராத உழைப்புத்தான். அந்தக் கடும் உழைப்பு இவரைக் கட்சியின் புகழ் உச்சிக்கே உயர்த்தியது. கழகம் கண்ட வெற்றிகளிலே பல கருணாநிதி அவர்களின் உழைப்பால் நேர்ந்தவை என்பதே அமரர் அண்ணாவின் கருத்து.

இவருக்கு வந்து சேரும் நன்மையும் தீமையும் இவரைச் சூழ்ந்துள்ளவர்களால்தான். இவர் தமக்காகச் சுகங்களைத் தேடிக்கொள்வதைவிடத் தம்மையே முழுக்க முழுக்க நம்பிச் சூழ்ந்திருப்பவர்களின் நலன்களில் கவனம் செலுத்தத் தவறியதில்லை.

தம்மையே முழுக்க முழுக்க நம்பியிருப்பவர்களாக இருப்பினும் அவர்களால் இக்கட்டான நிலை ஏற்பட்டுத் தம் பெயருக்கு மாசு ஏற்படும் எனக் கருதுவாரானால் அந்த

விநாடியே அவர்களை ஒதுக்கவும் தயங்க மாட்டார்!

கலைஞர் கருணாநிதி அவர்கள் அமெரிக்காவுக்குச் சென்றிருந்தபோது ஒரு நண்பர் என்னிடம் ''தம் கலைஞர் அமெரிக்காவில் இருக்கும்போது ஆங்கிலத்தில் பேசுவாரா அல்லது தமிழில் பேசி மொழிபெயர்ப்பாளரின் உதவியை நாடுவாரா?'' என்று கேட்டார்.

இதற்கு நான் சிறிதும் தாமதிக்காமல் பதில் கூறினேன். ''ருஷ்யப் பிரதமர் அண்மையில் இந்தியாவுக்கு வந்திருந்தாரே அவர் ஆங்கிலத்தில் பேசவில்லையே? தமது தாய்மொழியில்தானே பேசினார்!'' என்று அவரை மடக்கினேன்.

சென்ற ஆண்டு என்று நினைக்கிறேன். முதல்வர் கருணாநிதி ஆங்கிலத்தில் அண்டை மாநிலங்களைப் பற்றிய ஒரு பதிலை, சட்ட மன்றத்தில் பேசியபோது, நான் ஓர் அமைச்சர் அறையிலிருந்த ஒலிபரப்பி மூலம் அதைக் கேட்க நேர்ந்தது. இவ்வளவு அழகாகத் தங்கு தடையின்றிப் பேசுகிறாரே என்று நான் அயர்ந்து போனேன்.

ஆரம்ப காலத்தில் இவரது குடும்ப வாழ்க்கை இவருக்கு அவ்வளவு மகிழ்ச்சிகரமாக அமையவில்லை என்று நெருங்கிப் பழகியவர்களுக்குத் தெரியும். ஆனால் எத்தகைய இக்கட்டான நிலைமை ஏற்பட்டாலும் தமது கடமையிலிருந்து தவறிவிட்டதாக யாரும் துணிந்து கூற முடியாத அளவுக்குக் குடும்பப் பற்றுக் கொண்டவர்.

தமக்கு ஏற்படும் பிரச்சினைகளைப் பற்றிச் சில சமயங்களில் குடும்பத்தினரைக் கலந்து பேசி முடிவு எடுப்பதும் உண்டு. பொதுவாக இவர் எவ்வழியோ அவ்வழியே இவரது குடும்பமும். இவர் நினைப்பதையே இவர் குடும்பத்தினரும் நினைக்கும் வகையில் இவர் அதிருஷ்டசாலியே.

கலைஞர் கருணாநிதி அவர்கள் தமிழகத்தின் புதிய முதலமைச்சராகத் தேர்ந்தெடுக்கப்பட்ட நேரத்தில்தான், திருச்சானூரில் சஞ்சீவ ரெட்டி அவர்களின் மகளுக்குத் திருமணம். பிரதமர் இந்திரா காந்தி, மற்ற மத்திய அமைச்சர்கள் எல்லோரும் வந்திருந்தார்கள். கழகத்தைச் சேர்ந்த கந்தப்பன் அவர்களும் அந்தத் திருமணத்துக்குப் போயிருந்தார்கள். மண விழா முடிந்ததும், கந்தப்பன், பிரதமர் இந்திரா காந்திக்கு வணக்கம் சொல்லிவிட்டு, ''தமிழகத்தின் புதிய முதல்வர் கலைஞர் கருணாநிதி'' என்றாராம். பிரதமர் உடனே ''அண்ணா அவர்களின் ஒத்துழைப்பை — உறவு முறையை இவரிடத்திலும் எதிர்பார்க்கலாமா?'' என்று மெதுவாகக் கேட்டாராம். தொடர்ந்து கந்தப்பனின் பதிலுக்குக் காத்திராமல், ''இவர் வேகம் படைத்தவர் என்கிறார்களே?'' என்றும் கேட்டாராம்.

''ஆம்! வேகம் படைத்தவர்தான். ஒத்துழைப்பும், உறவு முறையும் நீங்கள் மேற்கொள்ளும் நடவடிக்கைகளைப் பொறுத்து இருக்கும்'' என்று கந்தப்பனிடமிருந்து பதில் வந்தது. 'உறவுக்குக் கை கொடுப்போம்; உரிமைக்குக் குரல் கொடுப்போம்' என்பது தானே கழகத்தின் தலையாய லட்சியம்.

அந்த நாட்களில் ராஜாஜி அவர்கள் டி. எஸ். எஸ். ராஜனுக்குத் தந்தி கொடுத்து வரவழைத்து அமைச்சராக்கியது போல இவரும் இவருடைய நண்பர்களைத் தொலைபேசி மூலம் அழைத்து அமைச்சர்களாக அமர்த்தினார். இவருக்கு மாறுபட்ட கருத்துக் கொண்ட சில கழகத் தலைவர்களே இந்த விஷயத்தில் இவருடைய கூரிய நுண்ணறிவைப் பாராட்டிப் பெருமையாகப் பேசியதை நான் கேட்டேன்.

கட்சியின் வளர்ச்சியில் இவரது சிறப்புமிக்க கைவண்ணம் நிறைய உண்டு. பல இளம் தளிர்களை வானளாவ வளர்ந்தோங்கச் செய்திருக்கிறார். இயக்கத்தில் இவருக்குப் பக்க பலமாக அமைந்த தொண்டர்களிலே பலர் பின்தங்கிய வகுப்பைச் சேர்ந்தவர்கள்தாம். கட்சிப் பணியே தம் மூச்சு என்று செயல்பட்ட அந்த வீரர்களைக் காப்பதிலேயே கண்ணும் கருத்துமாக இருந்து இயக்கத்தில் தமக்கென ஒரு தனிமதிப்பைத் தேடிக் கொண்டதும் இவரது சிறந்த நிர்வாகத் திறமையின் விளைவுதான்.

முன் கோபம் இவருடன் சில நேரங்களில் நெருங்கி உறவாடும். காலம் செல்லச் செல்ல இவரது முன்கோபம் எங்கே போய் முடியுமோ என்று எண்ணிப் பயந்தவர்களில் நானும் ஒருவன்தான். ஆனால் அன்று அப்படி எண்ணியவர்களில் பலர் இன்று இவரது நிர்வாகச் சிறப்பை சர் ஸி. பி. ராமசாமி ஐயரின் திறமைக்கு ஒப்பிட்டுப் பேசுவதையும் நான் கேட்டிருக்கிறேன். தமிழக முதல்வர் இருக்கையில் அமர்ந்த பிறகு மக்கள் நலனுக்காக இவர் தீட்டியிருக்கும் பல திட்டங்கள் பாரதத்தில் உள்ள பிற மாநிலங்களும் கவனித்துப் பின்பற்ற நினைக்கும் அளவுக்குப் பெயர் பெற்றிருக்கின்றன. குடிசை மாற்று வாரியம், ஹரிஜனங்களுக்கு வீடு கட்டித் தரும் திட்டம், குடும்பப் பாதுகாப்புத் திட்டம் போன்றவற்றைப் பெருமையுடனேயே சொல்லலாம்.

''கடுமையான உழைப்பால் உயர்ந்த கருணாநிதி இப்போது செய்திருக்கிற காரியங்களைப் போல் பன்மடங்கு அதிகமான காரியங்களைத் தமது திறமையின் மூலம் நிறைவேற்ற வேண்டும். அவரிடமிருந்து நாடு இன்னும் நிரம்ப எதிர்பார்க்கிறது'' என்று கலைஞரின் நாற்பத்தி ஐந்தாவது பிறந்த தின விழாவில் அமரர் அண்ணா கூறினார். அந்த வாக்கு பலித்து வருகிறது.

''கலைஞர் எதிலும் செம்மையையும் சீரையும் கவனிப்பார். தலையைக் கூடச் சீராக ஒழுங்காகச் சீவுவார். இப்போது கடின உழைப்பின் காரணத்தால் அதில் குறை ஏற்பட்டிருக்கிறது. தக்க உடை உடுத்துவதிலும் அவரைப் போல் மற்றவர்கள் செய்து காட்ட முடியாது, கைவிட வேண்டியதுதான்''என்று அமைச்சர் அன்பழகனே ஒரு சந்தர்ப்பத்தில் கூறியிருக்கிறார்.

ஒரு சிறந்த பேச்சாளர்; நயம் நிறைந்த ஓர் எழுத்தாளர்; கலையுணர்வு பொங்கும் நடிகர்; வலிமையான வாதத் திறமையால் எதிலும் வெற்றி காணும் வாசாலகர் ஆகிய நான்கு பேர்வழிகளைத் தம்முள் ஐக்கியமாக்கி வைத்துக் கொண்டிருப்பவர் டாக்டர் கலைஞர் கருணாநிதி அவர்கள் என்று சொல்வது மிகையாகாது.

கேட்டு எழுதியவர்: **கோமதி சுவாமிநாதன்**

மேலட்டை வண்ணப் படம்: **உத்தரா**

**மோ**கனுக்கு அன்று பொழுது போக வில்லை. ரம்யாவைப் பார்த்துவிட்டு வரலாம் என்று புறப்பட்டான்.

குட்டையான ஸ்கர்ட் — ப்ளவுஸ் போட்டுக் கொண்டு முன்புற வராந்தாவிலிருந்த சோபா ஊஞ்சலில் செல்லமாகக் கால்களை உரசிய வாறே ஃபெமினாவைப் புரட்டிக்கொண்டிருந் தாள் ரம்யா.

''ஹாய் ரம்!''

''ஹாய் மோகன்!''

வழுவழுக்கும் முழங்கால்களில் ஸ்கர்ட் டின் மடிப்புக்கள் அலை அலையாய்ப் படியப் பாய்ந்தோடி வந்தாள் ரம்யா.

''ரொம்ப 'போர்'! நல்ல வேளை நீ வந்தாய்.... புல்வெளிக்குப் போகலாம்!''

காலைக் குளிர்விக்கும் புல்லின் ஸ்பரிசத்தில் மனம் குளிர அமர்ந்து வறுவலையும் முந்திரிப் பருப்பையும் கொறித் தவாறே பேசிக் கொண்டனர். புது முக நடிகையிலிருந்து டிஸ்கொதேயில் கடை சியாகப் பார்த்த உஷா வரை.... அப் புறம் நுனி நாக்கில் படரும் சொற்களில் சுவாரசியமில்லாத ஒரு சலிப்பு.

''ஹோ, ஹோ! உஷா!'' என்று கூவினாள் ரம்யா.

உஷா வந்தாள். பெல்பாட்டம் உடையில் கவர்ச்சியின் வடிவ அமைப்புக்கள் இயற்கை யாய்ப் பொலிய நின்றாள். அவள் முகத்தின் முறுவல் மோகனைக் கண்டதும் நீண்டது.

மோகனுக்குச் சுவாரசியம் ஏற்பட்டது.

நீச்சல் பயிற்சியில் அவள் ஈடுபட்டிருப்பது பற்றி... அதற்குரிய பயிற்சிகள் பற்றி... மேற்கத்திய இசையில் அவள் கற்றுக் கொண்ட சில பாடல்கள் பற்றி.... அவ னுக்குப் பிடித்த முறையில் பேசினாள். திரும் பும்போது அவளோடு பஸ் ஸ்டாப் வரை யில் பேசிக் கொண்டு வந்தான். அதன் பின் அவள் ஞாபகம் ஓர் இனிய மணி ஓசையாக நெஞ்சில் குலுங்கும்அளவு நிலைத்தும் நின்றாள்.

**பா**லுவின் வீட்டில் பிறந்த நாள் விருந்து. அதிலும் 'மது' விருந்து! வழக்கமாக மோக னுக்குப் பிறந்த நாள் விருந்து ரசிப்பதில்லை. பலதிறப்பட்ட வயதினர் கூடும் இடம் என்ப தால் மட்டுமல்ல... ஒரேமாதிரி மெழுகு வர்த்திகளை ஊதிவிட்டு, கேக்கை வெட்டித் தின்பதில் அப்படி எந்த சுவாரசியத்தையும்



# அறிமுகச் சோலை

**கோமகள்**

காணவில்லை அவன். ஆனால், 'மது' விருந்து என்ற ஒரே காரணம் அவனை அங்கே நெட்டித் தள்ளியது. ஒரு குறிப்பிட்ட அளவு மது அருந்துவதில் ஏற்படும் இலேசான கிளர்ச்சியை அவன் விரும்புவதுண்டு.

அங்கே உஷாவைக் கண்டதும் அவனுக்குக் 'குபீர்' என்று ஆனந்தம் பொங்கியது. 'ஓ! இந்த உஷா! உடம்பை யெல்லாம் 'மாக்ஸி'யால் மறைத்துக் கொண்டு நின்றாலும் தேவதை போல் அல்லவா இருக்கிறாள்!'

கேக்கை எடுத்துப் பாலுவின் வாயில் திணித்து விட்டுக் கிளாஸை எடுத்துக் கொண்டு அவனருகே உஷா வந்தபோது முதலில் அவன் திடுக்கிட்டான். ஆனால் அவள் அண்மையும் அந்தச் சிரிப்பும் அவனைச் சிநேக பாவத்துடன் உறவாடத் தூண்டிற்று. சற்றும் தயக்கமின்றி ஒரு மிடறு உறிஞ்சி விட்டுத் தூர வைத்தாள். ''ஒரு நாகரிகத் துக்காக'' என்று கிளுகிளுப்பான குரலில் கூறினாள்.

அவன் அவளது நாகரிகத்தைப் போற்றும் உணர்வினை மெச்சிக் கொண்டான். அதே நேரத்தில் உஷாவைப் போன்ற ஓர் எல்லாம் தெரிந்த பெண் ஒருத்தி வேறு யாரும் இல்லை என்பதாக மனத்துள் எண்ணிக் கொண்டான். அவளது நட்பை அதிகமாகவே விரும்பி ஏற்கவும் செய்தான்.

அதன் பின் எங்கேயாவது பொது இடங்களில் அவளைப் பார்த்தால் அவன் மனம் பூவாக மலரும். விழாக்களில் அவள் வரவு அவனை மேலும் விகசிக்க வைத்துவிடும்.

''நாடக டிக்கட் வீணாகிறது. நானும் உன் அண்ணியும் மாமல்லபுரம் போகிறோம். நீ வேண்டுமானால் போய்விட்டு வா'' என்று மோகனின் அண்ணா வாசு இரண்டு சபா டிக்கட்டுகளை நீட்டினார்.

அந்த நாடகத்துக்கு நல்ல வசூல். நல்ல பெயர். சீக்கிரமே திரைப்படமாகவும் ஆகிக் கொண்டிருந்தது. இன்றையப் பொழுதைக் கொல்ல ஒரு வழி என்றவாறே மோகன் புறப்பட்டான்.

நாடகம் ஆரம்பித்த சிறிது நேரத்தில் திரைகளிடப்பட்ட செயற்கை இருளின் மங்கலான ஒளியில் அவனருகே ஒரு மல்லிகை மணம் கமழ்ந்தது. புடவையின் உரசலில் மேனி புல்லரித்தது. ஓரக் கண்ணால் நோட்டமிட்டவன், வியப்பான அதிர்ச்சியோடு ''மிஸ் உஷா!'' என்றான்.

''ஓ! மோகன்!''

அவள் புடவை அணிந்திருந்தாலும் உடம்பைப் போர்த்தியிருந்த புடவையின் ஊடுருவலில் நெளிவுகளும் வளைவுகளும் பிரமாதமாகப் பிரதிபலித்தன. மாக்ஸிக்கோ, பெல்பாட்டத்துக்கோ இருந்த கவர்ச்சியை விட, இந்தப் புடவையில் பல மடங்கு கவர்ச்சியைக் காட்டியிருந்தாள்.

ஒரு காட்சி முடிந்த திரையிடலில் அவள் அழகை ரசித்தவன் நாடகத்தை ரசிக்க முடியவில்லை.

''நாடகம் எப்படி?''

திரை விழும்போதெல்லாம் உஷாவையே கண்கொட்டாது பார்த்திருந்தவனுக்கு நாடகம் மனத்தில் பதிந்தால்தானே? ''பரவாயில்லை'' என்று முணுமுணுத்தான்.

''பரவாயில்லையா? முதல் தர நாடகம். ஆனால் பாருங்கள் மோகன், இது சினிமா வாசுன்னா, பாலைத் திரிச்சுத் தயிராக்கிய மாதிரிதான்! தயிரிலேயும் ஒரு ருசி இருக்கு. ஆனாலும் பால் பால்தான்! தயிர் தயிர்தான்!''

அவன் உவமையை ரசித்தான். மற்றபடி அவனுக்கு அந்த நாடகம் அப்படியே நீடிப்பதிலும் ஆட்சேபணை இல்லை, சினிமாவாவதிலும் வருத்தமில்லை.

''டேய் மோகன்! இன்னிக்குச் சாயந்திரம் ஓர் இடத்துக்குப் புறப்படணும். வெளியிலே கிளம்பிவிடாதே'' என்றார் அண்ணா வாசு.

எங்கே என்று மோகனுக்குக் கேட்கப் பயம். அண்ணி அவனிடம் கூறினாள். அவனுக்காக ஒரு பெண்ணைப் பார்க்கப் போகிறார்கள்!

அண்ணி ஒரு புகைப்படத்தைத் தந்தாள். குபீரென்று மேனி முழுதும் ஊடுருவச் சிலிர்த்தான் மோகன். மோகனின் நினைவில் சட்டென்று நிலைத்தவள்தான். தலையில் கட்டு மல்லிகை. ஒற்றைப் பின்னலுடன் பட்டுப் புடவையின் பார்டர் தெரிய, நெற்றியில் வட்டப் பொட்டுடன்...

''என்ன மோகன், லயிச்சுட்டே?.... பொண்ணு சமையலில் ரொம்பக் கெட்டிக்காரி. நம்ம பழக்க வழக்கங்களிலே ரொம்ப ஈடுபாடு. அடக்க ஒடுக்கமான பெண்ணும்... வெளியிலே துணை இல்லாமல்கூடப் போக மாட்டாளாம்..... அத்தனை அடக்கமாம்!''

அவன் தீர்மானித்து விட்டான். அவனுக்கு இவள் கவைபடமாட்டாள்! என்ன? அவனுக்கே இந்த முடிவு அதிர்ச்சியாக இருந்தது!

குபீரென்று மோகனின் மனத்தில் ஒரு தீயின் தகிப்பு சுடர்விட்டு ஆறியது. நம்ப பழக்கவழக்கங்களிலே ரொம்ப ஈடுபாடாம்! அடக்க ஒடுக்கமான பெண்ணாம்! வெளியிலே துணையில்லாமல் போகமாட்டாளாம்!

வார்த்தைகள் வெறும் வார்த்தைகள்! உண்மையைப் பிரதிபலிக்காத சொற்கள்!

''அண்ணி!''

''முதன் முதலிலே போறோம். மறுப்பு எதுவும் வேண்டாம். பார்த்துவிட்டு வந்ததும் பேசிக்கலாம்.''

ஒற்றை ஒற்றையாய்க் காற்றில் பறக்கும் ஷாம்பூ முடி, எண்ணெய்ப் பளபளப்புடன் அழுந்த வாரிப் பின்னலிடப்பட்டிருந்தது. இளமைக் கொழுவாய்க் காட்சியளிக்கும் உடையலங்காரம் உடலில் கனமாகப் போர்த்தப்பட்ட சரிகைப் புடவையாக மாறிவிட்டிருந்தது. நகைப்பின் துள்ளல் நடிப்பின் அடக்கமாக, அறிமுக முறுவல், அறியாதவருடன் பழக நேரும் நாண நடிப்பாக மாற ஒரு சம்பிரதாயம் நடந்தேறியது.

இளமைக்குரிய கௌரவத்தை நாகரிகத்துக்குக் காணிக்கையாக்கிய உஷாவா இவள்! புடவையைக்கூட, பெல்பாட்டத்தைவிடக் கவர்ச்சியாக்கி அங்க லாவண்யங்களின் — அழகைக் காட்டுபவளா இவள்? பாலுவின் வாயில் கேக்கை ஊட்டிவிட்டு, கிளாஸிலிருந்ததை ஒரு மிடறு விழுங்கிவிட்டு, 'ஒரு நாகரிகத்துக்காக' என்றவளா இவள்? என்ன அழகாக ஒரு நாடகம் நடைபெறுகிறது!

"ஒரு சின்ன 'எக்ஸ்பிளனேஷன்' தரமுடியுமா?'' அதே சிரிப்போடு பெல்பாட்டத்தின் அப்பட்ட அழகோடு 'டிரைவ் — இன்'னில் அவன் சற்றும் எதிர்பாராதபோது அவன் வந்து அமர்ந்தான்.

''உன் இயல்பான உருவத்தை அவர்கள் ஏன் திரையிட்டுக் காட்டினார்கள்? உன் பழக்கமான உணர்வுகளை அவர்கள் ஏன் மறைத்து நடித்தார்கள்? உன் உடை, பழக்க வழக்கங்கள் எல்லாம் எனக்கு முன்பே தெரியும் என்பதால், மறுப்பு வரும் என்பதை நீயும் உணர்ந்திருக்கலாமே ?''

''எனக்குப் புரியவில்லை.'' அவள் மேலும் விளக்கம் விரும்பினாள்.

''நீ பாலுவின் வாயில் கேக்கை வைத்துவிட்டு, மதுவையும் அருந்துபவள்! உடைகளைத் நினுக நினுசாக அணிந்து உடலழகைப் பிறர் பார்வைக்கு விருந்தாக வைப்பவள். அதை நான் விரும்பி ரசித்தேன் என்பது வேறு... ஒவ்வொரு அறிமுகத்தின்போதும் என்னை நீ கவர்ந்தாய்! உற்சாகப்படுத்தினாய்! உன் பழக்கத்தை நான் விரும்பி ஏற்றேன்.... உண்மை! ஆனால் அது வேறு விஷயம்! இந்தக் காரணங்களால் மட்டுமே உன்னை என் மனைவியாக்கிக் கொள்வேன் என்று நினைத்தால், உன் அன்றைய வேஷம் தேவையேயில்லை. இந்தக் காரணங்களினாலேயே, அப்படிப்பட்ட ஒரு பெண், மனத்தில் இன்பப் புல்லரிப்போடு, என் படுக்கையறையில் பாலை எடுத்துக் கொண்டு, நடை தயங்கி, நாணம் பெருக வரும் உரிமையை அளித்துவிட முடியுமா ?''

''ஓ!'' உஷாவின் குரலில் மிதந்தது ஓர் ஏளனத் தொனி.

''மிஸ்டர் மோகன்! இதே காரணங்கள் உங்களுக்கும் பொருந்துமே.... மணமாகுமுன் நீங்கள் பெண்களுடன் அறிமுகப்படலாம். சுவாரசியத்துடன் அமர்ந்து விழி பிதுங்க அழகை ரசிக்கலாம். தனிமையில் சந்திக்க முன்வரலாம். இதுவே உங்களுக்குப் பெளருஷமாகவும், எங்களுக்குக் கேவலமாகவும் ஆகிவிடுகிறதா ?... அப்படியென்றால் உங்கள் கறை படிந்த வாழ்க்கைக்கு மட்டும் யாருமே பார்த்தறியாத, உணர்ந்தறியாத ஒரு காட்டு மலர் தேவையாக்கும் ? இதுதானே உங்கள் நியாயம்? அப்படியானால் உங்களைப் போன்றவர்கள் ஏன் பெண்களின் அறிமுகத்துக்கு இப்படிப் பேயாய்ப் பறக்கிறீர்கள்?''

மோகன் விக்கித்து நின்றான்!

---




தலையங்கம் பார்த்தேன்.

ஜீவராசிகளின் வளர்ச்சியில் ஒரு கால கட்டத்தில் சிவிங்கிகளுக்குக் கழுத்து நீளமாக இருக்கவில்லை. ஆனால் எட்டுகிற உயரத்தில் உள்ள இலை தழைகளைத் தின்று முடித்து எட்டாத உயரத்தில் உள்ள இலைகளைப் புசிக்கக் கருதி சிவிங்கி கழுத்தை நீட்டிப் பழகியதால் பல தலைமுறைகளில் அதன் கழுத்து நீண்டு கொண்டே வந்து இன்று நாம் காணும் ஒட்டைச் சிவிங்கியாக விளங்குகிறது! இது டார்வின் கொள்கை. மானின் கழுத்தை நாம் உருவிவிட்டு நீட்டப் பார்த்தால் நடக்குமா? மொழி வளர்ச்சி அடைவதும் இவ்வாறே அத்தியாவசியத் தேவைகளையொட்டி இயல்பாக ஏற்பட வேண்டியதுதானேயன்றி ஏராளமாய்ப் பணத்தைச் செலவிடுவதாலோ, பலவந்தமாகத் திணிப்பதாலோ நடக்கிற காரியமல்ல.

பிரதமரின் சீரிய யோசனையை ஹிந்தி வெறியர்கள் ஏற்கட்டும்.

சென்னை — 34
23—1—75

குணசேகரன்

"பொதுவாக யாருக்குமே வேலை நிறையச் செய்ததைப் பாராட்டி மரியாதை கிடைக்கும். எனக்கோ மரியாதை முதலில் கிடைத்துவிட்டது. இப்போது வேலை செய்யப் பணியுங்கள். செய்யக் காத்திருக்கிறேன்'' என்ற அடக்கமான உரை கேட்டு அயர்ந்தே போனேம்.

நிறைகுடம் என்ற சொல்லுக்கு எடுத்துக் காட்டாகப் பேச்சிலும், தோற்றத்திலும் எளியராக இந்தி உலக மாநாட்டரங்கிலே நின்ற திரு வீழிநாதனைக் கண்ணுற்று அதிசயித்தோம்.

பெயர் அறிவிக்கப்பட்டபோது கரவொலிக்கிடை பதற்றமே அறியாப் பண்போடு சிறு நடை போட்டுவந்து உபராஷ்டிரபதி ஸ்ரீஜட்டியிடமிருந்து விருது பெற்றுக் கொண்டார்.

பன்மொழிப் புலவர் தெ. பொ. மீ. ''உடல் நலக் குறைவால் விருது பெற வர இயலவில்லை'' என்ற அறிவிப்பால் நைந்த தமிழ் உள்ளங்களுக்கு திரு ரா.வீ. அவர்களாவது வருகை தந்தார்களே என்ற உணர்வு உள்ளப் புண்ணை ஆற்றும் அருமருந்தாகியது.

நாகபுரி — 1
14—1—75

கோபாலன்

நாட்டின் தற்காலத்திய நிலைமையை தெள்ளத் தெளிவாக எடுத்துக் காட்டுவது 'திருடர்கள்' என்ற தலைப்பில் திரு ர. க. நல்லபெருமாள் எழுதிய கதை. நாட்டின் சுபிட்சத்துக்கு ஒரு புரட்சிகரமான மாறுதல் தேவை. அத்தேவையைப் பூர்த்தி செய்ய ர. க. நல்லபெருமாள் போன்ற பல ஆசிரியர்கள் வித்திட வேண்டும்.

14-1-1975 நிர்வாக ஊழியர்கள்,
கோவை குமரன் நூற்பு ஆலை.

இக்கடிதத்தில் பதினைந்து பேர் கையெழுத்திட்டு உள்ளனர்.

''திருடர்கள்'' நாவலைப் பாராட்டி வேறு பல கடிதங்களும் வந்துள்ளன. அன்புடன் எழுதிய அனைவருக்கும் நன்றி - ஆசிரியர்

## மாயவரம் பைனான்ஷியல் கார்ப்பொரேஷன் லிமிடெட்

(நிறுவியது 1947)

**13-H, கச்சேரி ரோடு - மாயவரம்**

**30-11-74 அன்று உள்ளபடி.**

1. அங்கீகாரம்பெற்ற மூலதனம் ... 5.00 லட்சம்
2. செலுத்தப்பட்ட மூலதனம் & ரிசர்வுகள் ... 4.97 லட்சம்
3. சீட்டு செயல் நிதிகள் ... 483 லட்சம்

**மாதாந்திர ஏல சீட்டு குருப்புகள்**

கீழ்க்குறித்த மாதாந்திர சீட்டு குருப்புகளுக்கு விண்ணப்பங்கள் வரவேற்கப்படுகின்றன

| மாதாந்திர சந்தா | மாதம் | அங்கத்தினர்கள் | சீட்டு மதிப்பு |
|---|---|---|---|
| ரூ. | | | ரூ. |
| 2,000 | 50 | 50 | 1,00,000 |
| 1,000 | 50 | 50 | 50,000 |
| 500 | 50 | 50 | 25,000 |

*எமது சீட்டு சந்தாதாரர்களுக்குத் திறமையும் மரியாதையும் மிக்க சேவை நிச்சயம் கிடைக்கச் செய்வதில் மனமார உழைத்திடுகின்றோம்.*

*மாயவரம்*
*18-12-74*

**R. கல்யாண சுந்தரம்**
மானேஜிங் டைரக்டர்

---

# வட்டி 13% வரை

## உங்கள் முதலீட்டிற்கு
## மாயவரம் பைனான்ஷியல் சிண்டிகேட்
## வழங்குகிறது

| தவணை டிபாசிட்டுகள் (குறைந்த பட்சம் ரூ. 1000/-) | | ஆண்டு ஒன்றுக்கு வட்டி |
|---|---|---|
| 1 வருடத்திற்கு | ... | 11% |
| 2 வருடத்திற்கு | ... | 12% |
| 3 வருடமும் அதற்கு மேலும் | ... | 13% |

**வட்டி பிரதி மாதமும் வழங்குகிறோம்**

**ரெக்கரிங் டிபாசிட்டுகளுக்கு கவர்ச்சிகரமான வட்டி விகிதங்கள் அளிக்கப்படுகின்றன**

**R. கல்யாண சுந்தரம்**
மானேஜிங் பார்ட்னர்

**விவரங்களுக்கு**

## மாயவரம் பைனான்ஷியல் சிண்டிகேட்

(ரிஜிஸ்டர்டு)

**13-ஜி, கச்சேரி ரோடு - மாயவரம்-609 001 (தமிழ்நாடு)**



பிரசித்தி பெற்ற நட்டுவனார் சிக்கில் ராமசாமிப் பிள்ளையின் மாணவரான எஸ். ஜி. சுந்தரத்தின் மாணவி குமாரி சுகந்தியின் பரதநாட்டிய அரங் கேற்றம் சமீபத்தில் சிறப்பாக நடந்தேறியது. தலைமை வகித்த வழுவூர் ராமையா பிள்ளை குமாரி சுகந்திக்கு நல்ல எதிர்காலம் காத்திருக்கிறது என்று கூறி வாழ்த்தினார்.

திரு எஸ். ராமகிருஷ்ணன் (ஈஸ்டர்ன் எலெக்ட்ரிக்கல், சென்னை) அவர்களின் குமாரத்திகள் செல்வி, ஜெயந்தி, செல்வி உமாமகேஸ்வரி ஆகியோர்களின் அரங்கேற்றம் சமீபத்தில் நடந்தேறியது. இருவரும் பந்தணைநல்லூர் திரு சுப்பராய பிள்ளை அவர்களின் மாணவிகள். பந்தணைநல்லூர் பாணியை இருவரும் சிறப்பாக வெளிப்படுத்தினர். அரங்கேற்றத்துக்குத் தமிழ்நாடு அரசு பிரதம காரியதரிசியான திரு பி. சபாநாயகம் தலைமை வகித்துக் குழந்தைகளை ஆசிர்வதித்தார்.





புது தில்லி தமிழ்ச் சங்கம் பாரதி விழாவில் ஜனாதிபதி, குமாரி ராதிகாவின் நாட்டியத்தை மெச்சிப் பரிசு வழங்குகிறார்.

## அரங்கேற்றமும் நடனமும்

சென்னை, பிரம்மகான சபையின் ஆதரவில், ஸ்ரீ சி. வி. சந்திரசேகர், ஸ்ரீமதி ஜயா சந்திரசேகர் குமாரி சித்திரா சந்திரசேகர் ஆகிய மூவரும் அருமையான நடன விருந்தை வழங்கினர். லய சுத்தமும், பாவப் பொழிவும் அழகு பாணிகளோடு இயைந்து வெளிப்பட்டன. தந்தை, தாய், குமாரத்தி மூவரும் இணைந்து ஆடிய மாரீச வதம் ராகமாலிகை (துளசி ராமாயணம்) கண்ணுக்கும் கருத்துக்கும் விருந்தாக அமைந்தது. ஸ்ரீ சந்திரசேகர் எம். ஏ. காசி இந்து சர்வகலாசாலையில், நாட்டியப் பகுதியின் தலைவரா யிருக்கிறார். ஸ்ரீமதி ஜயா, சட்டப் படிப்பில் பட்டம் பெற்றவர்; இருவரும் சென்னை கலா க்ஷேத்திரத்தில் நடனக் கலை பயின்றவர்கள். குமாரி சித்திரா, பள்ளிப் படிப்போடு இசையும் நடனமும் பயின்று வருகிறாள்.



அவ்வார ஆங்கில இதழில் வெளியாகி யிருந்த ஒரு காபரே நடனமணியின் பேட்டியைப் படித்து முடித்தாள் பத்மா. கையில் இருந்த ஆங்கில இதழை மூடி வைத்துவிட்டுச் சிந்தனையில் ஆழ்ந்தாள்.

அப்பா! இந்தப் பெண் யார் வீட்டுப் பெண்ணோ? உயர் குடிப் பிறப்பாம். பேட்டியில் தெரிவித்திருக்கிறாள்.

'தன் சுகத்தைக் குறைத்துக் கொள்ளத் தெரியாத பெண்ணும் ஒரு பெண்ணா? பணத்துக்காக எதையும் செய்வதா? சே' அருவருப்புத் தோன்றியது.

எத்தனை பெண்கள் குடும்பமே கோயில் எனத் தன் வயிற்றை வாயைக் கட்டிக் குடும்பத்தைக் காக்கவில்லை?

சட்டென்று அவளுக்கு ஒருத்தியின் நினைவு வந்தது. ஆம்! அவளும் ஒரு காவியத் தலைவிதான்! ஆனால் உலகம் புரிந்து கொள்ளாத தலைவி அவள்.

அவள் வாழ்க்கை....! எத்தனை பரிதாபகரமானது! பத்மாவின் மனக் கண்ணின் முன்னால் தோன்றினாள் ஆச்சி.

அவள்தான் பத்மா கண்ட காவியத் தலைவி! அவள் மனத்தைப் போல் சிறிய கண்கள்! உணர்ச்சிகளை வெளிக் காட்டாததினாலா?... நரையில் பாதி தலையை ஆக்கிரமித்தது. நெற்றிச் சுருக்கம் அனுபவத்தை விளக்கிற்று. நெற்றியில் பெரிய, ஆனால் அளவுக்கு மீறாத குங்குமம். மனம்? கண்ணுக்குத் தெரியாத அது. நெருங்கிப் பழக ஆரம்பித்ததும்தான் மிகப் பெரிது, அன்பெனும் கடலை உள்ளடக்கிக் கொண்டுள்ளது என்பது, பத்மாவுக்குப் புரிந்தது.

பத்மா, யாரையும் எளிதில் நம்பாத குணம் உடையவள். அவள் கணவருக்கு மாற்றலாகித் தனியாக வந்தார். பிறகு ஒரு மாதம் கழித்துக் குழந்தைகளை அம்மாவிடம் விட்டு விட்டு அவளும் வந்தாள். வீடு பிடித்தது. அண்டை அயல்?

கணவன் கூறிய தகவல் அவளைத் திடுக்கிட வைத்தது. பக்கத்து வீட்டில் செல்லம்மா ஆச்சி. அவள் தேவதாசிகுலத்தில் பிறந்தவள். அவள் கணவன் குடிகாரன் - கிச்சா ஐயர்!

பத்மாவுக்குக் குமட்டிக் கொண்டு வந்தது.

''வேறு வீடு கிடைக்கவில்லையா உங்களுக்கு?'' பத்மா பொரிந்தாள்.

''ஏன் பத்து! இப்படிக் கோபப்படறே? அந்த ஆச்சி ரொம்ப நல்லவ. பழகிப் பார்.''

'ஓஹோ! அதற்குள்ளேயே மயக்கியாச்சா? இவருக்குத்தான் யாராவது கஷ்டம் என்றால் கண்ணிலே ஜலம் வந்துவிடுமே. பலே கைகாரிதான்.'

இரண்டு நாட்கள் ஓடின.

ஒரு நாள் மாலை ஐந்து மணி. பத்மா வேலைகளை முடித்துக் கொண்டு சிறிது நேரம் வாசலில் போவோர் வருவோரை யெல்லாம் பார்த்துக் கொண்டு உட்கார்ந்திருந்தாள்.

''அம்மா சௌக்கியமா?''

குரல் கேட்டுத் திரும்பினாள் பத்மா.

''யார் நீங்க?''

''நான்தான் அம்மா உங்கள் வீட்டுக்குப் பக்கத்து வீட்டில் இருக்கும் ஆச்சி. ஐயா சொல்லியிருப்பாரே! ஒரு டம்ளர் மோர் இருந்தால் கொடுங்களேன். எங்க சாமி வந்திருக்கிறார்!''

'ஓஹோ! இன்றைக்கு மோர். நாளை என்னவோ?' என்று மனத்துக்குள் எண்ணியபடியே உரக்க, ''கொஞ்சம் இருங்க. இருக்கான்னு பார்க்கிறேன்'' என்றாள் பத்மா.

மோர் கொடுப்பதற்கு விருப்பம் இல்லை என்பதைச் சூட்சுமமாகத் தெரிவித்தாள் பத்மா.

பத்மா மதுரை வந்து ஒரு மாதம் ஆகிவிட்டது. ஊரெல்லாம் ஓரளவு பழகிவிட்டது. ஆனால் தெருவில் யாரும் இவளைத் தேடி வரவில்லை. பத்மாவும் யாருடனும் பேசவில்லை. ஆச்சி மட்டும் எப்போதும் வருவாள். ஆச்சிக்கு மட்டும் தெருவில் எல்லோருக்கும் ஒரு மரியாதை. அது ஏன் என்றே பத்மாவுக்கு விளங்கவில்லை. அவளுக்கு ஆச்சியைப் பற்றி ஓர் அபிப்பிராயமும் உருவாகவில்லை.

ஒரு நாள் பத்மாவின் வீட்டில் குழாய் ரிப்பேர். தண்ணீர் கிடையாது. கிணறும் இல்லை. ஆச்சி, தானே வலிய வந்து தன் வீட்டில் உள்ள கிணற்றில் தண்ணீர் எடுத்துப் போகும்படி கூறினாள். வேறு வழியில்லாமல் குடத்தை எடுத்துக் கொண்டு சென்றாள்.

முதலில் சிறிய அறை. மேஜை, நாற்காலி, ஒரு கடிகாரம், வெண்கலச் செம்பு. பக்கத்தில் ஒரு டம்ளர். அதைத் தாண்டியபிறகு சிறிய சமையல் அறை. கொடி அடுப்பு. சாணம் போட்டுச் சுத்தமாக மெழுகிக் கோலம் போடப்பட்டிருந்தது. பின்னால் சிறு கீரைப் பாத்தி, சில வாழைக் கன்றுகள், கிணற்றடி.





அந்த வீடு ஒரு துறவியின் குடில் போல் இருந்ததே தவிர, பத்மா நினைத்தது போல் பாயும் படுக்கையும் இல்லை. ஏதோ ஓர் அமைதி அங்கு குடிகொண்டிருந்தது.

தண்ணீர் நிரப்பிக் கொண்டு வீட்டுக்கு வந்த பத்மாவுக்கு நினைவுகள் ஆச்சியைச் சுற்றி வருவதை உணர முடிந்தது. ஆச்சியிடம் இருப்பது இரண்டு புடவைகள். பாதத்திலிருந்து ஒரு சாண் உயரத் தூக்கிக் கட்டிக் கொண்டிருப்பாள். எப்போதும் வெள்ளைச் சட்டை. காதில் வெள்ளைத் தோடு.

அவள் வீட்டைப் பார்த்த பிறகு பத்மாவுக்கு ஆச்சியிடம், ஒரு மரியாதையும் அவளைப் பற்றி அறிந்து கொள்ள வேண்டும் என்ற ஆவலும் ஏற்பட்டன. ஆனால் எப்படிக் கேட்பது என்று தயக்கம் வேறு. கூடிய விரைவிலேயே சந்தர்ப்பம் அமைந்தது.

''பத்மா! நான் ஆபீஸ் விஷயமாகக் கல்கத்தா போக வேண்டியிருக்கிறது. திரும்பி வர ஒரு வாரம் ஆகும். தனியாக இருப்பாயா? ஆச்சியை வேண்டுமானால்?...''

தயக்கத்துடன் வாக்கியத்தை முடித்தார். ஆச்சி என்றவுடன் பத்மா சீறுவாள் என எதிர்பார்த்தார். ஆனால் பத்மா, ''ஓ! ஆகட்டும்! பயம் இல்லாமல் போய் வாருங்கள்..... ஆச்சியை நான் துணைக்கு அழைத்துக் கொள்கிறேன்'' என்றாள். பத்மாவின் கணவனுக்கு ஒரே ஆச்சரியம். சாதாரணமாக ஆச்சி என்றாலே அசட்டை செய்யும் இவளுக்கு எப்படி மனம் வந்தது?

அன்றிரவு எட்டு மணிக்கே வந்துவிட்டாள் ஆச்சி. ''சாப்பாடெல்லாம் ஆச்சா, அம்மா ?''

''ஆம்.... ஆச்சு.... நீங்க...?''



''இன்னிக்குச் செவ்வாய்க்கிழமை விரதம்.''

பத்மாவுக்கு ஆச்சரியம் தாங்கவில்லை.

''ஏம்மா, ஒங்க குழந்தைங்க உங்க பிறந்தகத்திலேயிருக்கிறார்களா? பெரியவங்களா?''

''இல்லே ஆச்சி, மூணு நாலாவது படிக்கிறது. இன்னொன்னு ஒண்ணாவது படிக்கிறது. உங்களுக்குக் குழந்தைகள் கிடையாதா?''

''ஆமாம்! நான் இருக்கிற லட்சணத்துக்கு அது ஒண்ணுதான் குறைச்சல். அரசாங்கத்துக்கு என்னாலான ஒத்துழைப்புன்னு வைச்சுக்குங்களேன்.''

''அப்ப நீங்க தனியாவா இந்த வீட்டிலே இருக்கிறீங்க ?''

''இல்லீங்கம்மா. சாமி எப்போதாவது வருவார். ஒரு நாள் இரண்டு நாள் இருப்பார். போய்விடுவார்.''

'' யார் அவர் ?''

'' என்னைத் தொட்டுத் தாலி கட்டியவர்.''

பத்மா ஸ்தம்பித்து விட்டாள்.

''கணவன் என்றால் வீட்டோடு இருக்கலாமே! ஏன் இப்படி?'' பத்மாவுக்குக் குழப்பம் அதிகமாகியது.

''அம்மா ! இதுவரை என் கதையை நான் யாரிடமும் சொன்னதில்லே. சொல்லியிருந்தால் ஒரு சினிமாவே எடுத்திருப்பாங்க. உங்களைப் பார்த்தால் சொல்ல வேண்டும் போலத் தோன்றுகிறது.

''எங்க அம்மா பேரு ஆண்டாளு.....''

சினிமாக் கதை கேட்பது போல் தான் இருந்தது பத்மாவுக்கு.

**போட்டிக்கதை-21**

# தேய்ந்த பா

**லலிதா**



மயிலாப்பூர் ஃபைன் ஆர்ட்ஸ் கிளப் சார்பில் 'உண்மையே உன் விலை என்ன?' நாடகம் நடந்து கொண்டிருந்தது. வக்கீல் சோவின் மனைவியாக நடித்த சுகுமாரி, ஆரோக்கியசாமியிடம் அவரது கேஸ் சம்பந்தமான பத்திரங்களையெல்லாம் கொடுத்து விடுவதாக ஒரு காட்சி. ஆரோக்கியசாமியாக நடித்தவர் பத்திரங்கள் அடங்கிய பெட்டியை வாங்கிக் கொள்ளும் பொழுது, பெட்டி திறந்துகொண்டு விட்டது. உள்ளே காலியாக இருந்ததைப் பார்த்த ரசிகர்கள் 'காலி காலி' என்று கூச்சலிட ஆரம்பித்து விட்டனர். சோ உடனே சுகுமாரியிடம் ''பங்கஜம்! நீ கொண்டு வந்தது வேறே பெட்டி. இதே மாதிரி இன்னொரு பெட்டி மேல் அறையிலே இருக்கு. அதைக் கொண்டு வா'' என்று கூற, சுகுமாரியும் அந்தப் பெட்டியை உள்ளே எடுத்துக் கொண்டு போய் மீண்டும் அதையே 'வேறொரு பெட்டி'யாகக் கொண்டு வந்து விட்டார். இக்கட்டான நிலையைச் சிறந்த முறையில் சமாளித்ததுமல்லாமல், ரசிகர்களிடமிருந்து பலத்த கரகோஷத்தையும் பெற்றுக் கொண்டு விட்டார் சோ. - ஜோதி

◊◊◊◊◊◊◊◊◊◊◊◊◊◊◊◊◊◊◊◊◊◊◊◊◊◊◊◊◊◊

''குவா..... குவா.....!''

''ஆண்டாளு, உனக்குப் பெண் குழந்தை பிறந்திருக்கு. நல்ல குறுகுறுப்பு.''

''ஆண்டாளுக்கு ஒரே பெருமை. செல்லம் என்று ஆசையுடன் பெயரிட்டாள். நாளொரு மேனியும், பொழுதொரு வண்ணமுமாய், ஆச்சி—தவறு செல்லம்-வளர்ந்தாள்.

ஐந்து வருடங்கள் கரைந்தன. ஒரு நாள்:

''என்ன ஆண்டாளு, எதுக்கு என்னைக் கூப்பிட்டனுப்பிச்சே ?'' என்று கண்ணைச் சிமிட்டியபடி உள்ளே நுழைந்தார் நாயுடு.

அவர்தான் அவள் தொழிலுக்குப் புரோக்கர்!

''வாங்க, நாயுடு ஐயா ! என் மகளுக்குப் பாட்டு, டான்சு கற்றுத் தரணும். அப்படியே நாலு எழுத்துப் படிக்கக் கத்துக்கிட்டாத் தேவலே. அதுக்கு ஒரு நல்ல வாத்தியார் ஐயாவை நீங்கதான் ஏற்பாடு பண்ணணும்.''

''பேஷா ! பண்ணிட்டாப் போச்சு. எங்கே குட்டி ?''

குழந்தை குமரியானாள்.

சகல கலைகளும் அவளிடம் தஞ்சம் கொண்டிருந்தன. அவள் கதா காலட்சேபம் கேட்க உருகாத மனமும் உருகும். புகழ் அண்டை அசலில் பரவியது.

இவளுடைய வளர்ச்சியை (முன்னேற்றம் அல்ல) கவனித்துக் கொண்டிருந்த மைனர்கள் நாயுடுவை நச்சரித்தனர். நேரே ஆண்டாளுவைப் பார்க்கக் கௌரவம் இடம் தரவில்லை. நாயுடு ஆண்டாளிடம் கோடி காட்டினார். ஆண்டாளு ஒரு நாள் செல்லத்திடம், ''கண்ணு, நேத்து பண்ணின கதா காலட்சேபத்தைப் பாராட்டி, இந்த ஊர் மைனர் இந்த வளையல் அனுப்பி இருக்கார் உனக்கு'' என்றாள்.

''அம்மா! நீ என்ன சொல்லவறே?''செல்லம் சீறினாள்.

''நான் என்னடா கண்ணு புதுசா சொல்லப் போறேன்? 'தேய்ந்த பாதையில் நட'ன்னு பெரியவங்க சொல்லுவாங்க. அது போல் என் காலடியைப் பின்பற்றி வந்தால் உனக்கு எந்தக் கஷ்டமும் கிடையாது!''

செல்லம் வெடித்தாள்.

''உன் நோக்கம் எனக்குப் புரிகிறது. தார் ரோடு போட்ட பிறகு தேய்ந்த பாதையில் நடக்க வேண்டிய அவசியம் இல்லை. சுற்றி வளைப்பானேன்? ஒரு நல்ல வரனுகப் பார்த்து எனக்குக் கல்யாணம் செய்து வை. கௌரவமாக வாழ்கிறேன். இல்லாவிட்டால் வாழ்க்கை முழுவதும் கன்னிதான்.''

ஆண்டாள் சிலையானாள்.

''ஊஹூம்! நாலு எழுத்துப் படிக்க வைச்சது என் தப்பு. சட்டம் பேசுற சட்டம் !'' முனகிக் கொண்டே உள்ளே போய்விட்டாள்.

மேலும் சில நாட்கள் கடந்தன.

ஒருநாள்........

''என்ன ஆண்டாளு, குட்டி எப்படி இருக்கு ?'' நாயுடு உள்ளே நுழைந்தார்.

''பறவைக்கு இறக்கை முளைச்சிடுச்சு நாயுடு ஐயா! கூட்டில் அடைபட விரும்பலை.''

''எல்லாம் நாளாவட்டத்திலே சரியாகி விடும். சிறிசுதானே! அதுக்குள்ளே மனம் தளராதே, ஆண்டாளு! இன்னிக்கு நம்ம ஊருக்கு ஒரு தாசில்தாரு வந்திருக்காரு! நான் நேரே அவரை அழைச்சுக்கிட்டு வந்து திண்ணையில் உட்கார வைச்சிருக்கேன்.''

படபடக்கும் உள்ளத்துடன் ஆண்டாளு நின்றபடிக்குச் சென்று, ''செல்லம், நாயுடு ஐயா வந்திருக்கிறார் பார். உன்னைப்பார்க்கணுமாம்.''

''நாயுடு ஐயாவா ? என்னையா? எதற்கு?'' என்றவாறே உள்ளே வந்தாள்.

''வாங்க, ஐயா! என்ன விஷயம்?''

''வாம்மா, குட்டி ! எப்படி இருக்கே ? ஹி.....ஹி.....ஹி... சும்மாத்தான்...... இப்படி.... இந்த ஊர்லே ஒரு தாசில்தார் வந்திருக்கார். உனக்குத் தெரியுமா ? அவர் உன்னைப் பற்றிக் கேள்விப்பட்டு.... பார்க்கணும்னு.....ஹி...ஹி....''

செல்லத்துக்குப் புரிந்தது. புலி பாய்ந்தது.

''எந்த சீமான் என்னை மனைவியா ஏத்துக் கௌரவம் தருகிறானோ அவனுக்கு என்றுமே நான் அடிமை. போங்கள். போய்ச் சொல்லுங்கள்'' என்று கத்திவிட்டு உள்ளே போய் விட்டாள்.

நாயுடு வெளியே வந்தார். 'திக்'கென்றது. தாசில்தார் எங்கே? ஒரு வேளை கோபித்துக்

கொண்டு போய்விட்டாரோ? ஐயோ! அப்புறம் நம் பிழைப்பு என்னுவது?

நாயுடு தாசில்தாரைத் தேடி நடையைக் கட்டினுர். நாயுடுவுக்குத் தாசில்தாரை நன்கு தெரியும். அவருக்குக் கல்யாணமாகி ஒரு பெண்ணும் உண்டு. வெளியூர் வந்தால்..... இப்படித்தான்...... சொந்த ஊரில் மூச்!

தாசில்தார் தங்கியிருந்த இடம் வந்துவிட்டது. தாசில்தார் அங்கு இருந்தார்.

''நாயுடு, இன்று எனக்குத் தெய்வதரிசனம் கிட்டியது.''

''ஐயா! கோயிலுக்குப் போயிருந்தீங்களா? உங்களைத் திடீர்னு காணலையேன்னு ஓடி வந்தேன்.''

''நாயுடு! உன்னைப் போல் நானும் இத்தனை நாள் கோயிலுக்குச் சென்றால்தான் தெய்வ தரிசனம் என நினைத்திருந்தேன்.... ஆனல்.... இன்று அந்த வீட்டில் அந்தப் பெண்.... அடடா.... என்ன பேச்சு! அந்தப் பெண் பேசியதையெல்லாம் நான் கேட்டுக் கொண்டுதான் இருந்தேன். அதன் இஷ்டப்படியே ஒரு நாளில் — நல்ல நாளில் அவளை என் மனைவியாக ஏத்துக்கறேன்.''

நாயுடு சிலையானுர்.

'இப்படியும் ஒரு பைத்தியமா?'

**''அ**ப்புறம் எங்க கல்யாணம் நடந்தது அம்மா. எங்க சாமி என்னைத் தம் ஊருக்கு அழைத்துப் போனுர். கல்யாணம் ஆன பிறகு தான் ஏற்கனவே கல்யாணம் ஆனவர் என்று சொன்னுர். அது முன்னலேயே தெரிந்திருந்தால் இன்னெரு பெண்ணின் வாழ்க்கையைக் கூறு போட்டிருக்கமாட்டேன். முதல் தாரத்திடம் என்னை அழைத்துப் போனுர். அந்த உத்தமி வாயைத் திறக்கவே இல்லே. அவரு பெண்ணு தான் அப்பாவோட சண்டை போட்டுது.

''நான் கல்யாணம் ஆகியும் அங்கீகரிக்கப்படாதவளாக இருந்தேன். ஆனல், என் சாமி என்னைக் கைவிடவில்லை. தனி வீடு பார்த்துக் கொடுத்தார். இங்கும் அங்குமாக இரட்டை வாழ்வு வாழ்கிறர்.''

''உங்களுக்கென ஒரு குழந்தை இருந்திருந்தால் வாழ்க்கையில் சிறிது பிடிப்பு இருந்திருக்கும், இல்லையா, ஆச்சி?'' என்று பத்மா கேட்டாள்.

ஆச்சி உடனே, ''அம்மா! நான் மலடு என எண்ணிவிடாதீங்க! அரசாங்கத்துக்கு என்னலான சேவை என்றேனே. ஞாபகம் இருக்கா? அது உண்மை. முதல் இரவன்றே என் சாமி கைகளைப் பற்றிக் கொண்டு அழுதார். 'செல்லம்! நான் பெரிய தவறு செய்து விட்டேன்' என்றர் எனக்குத் திக்கென்றது. 'எது சாமி..... என்னைக் கல்யாணம் செய்து கொண்டதுதானே? நான் ஓரளவு எதிர் பார்த்ததுதான். ஏதோ உங்கள் மனைவி என்ற கௌரவமே போதும். உங்கள் வாழ்க்கையிலிருந்து விலகிக் கொள்கிறேன்' என்றேன்.

''இல்லை, செல்லம்! அவசரப்படாதே. நான் ஈடு இணையற்ற உன்னைக் கல்யாணம் செய்து கொண்டுவிட்டேன். இன்று நான் உனக்குத் தகுதி இல்லாதவனே என அஞ்சுகிறேன். நான் உன்னிடம் பாவமன்னிப்புக் கோரி வந்திருக்கிறேன். சாக்கடையில் உழன்ற நான் புனிதமான உன்னைத் தீண்டுவதுகூடத் தவறு. உன் புனிதத்தையும் காப்பாற்றுவேன்' எனச் சபதம் இட்டார் தாசில்தார் கிச்சா ஐயர். நான் துடிக்கப் போனேன். 'ஆமாம், சாமி சொல்றதும் ஒரு வகையிலே சரி. எனக்குக் குழந்தை பிறந்தால், என்னையே அங்கீகரிக்காதவர்கள், அதை ஆதரிப்பார்களா?' என்று கேட்டேன்.

''நான் வேண்டியது மனைவி ஸ்தானமே அன்றித் தாய்மை ஸ்தானம் இல்லையே... இதுதான் அம்மா என் கதை.

**''எ**ன்ன பத்மா! விளக்குக்கூடப் போடாம என்ன சிந்தனே! இன்னும் இரண்டு நாள்லே நாம ஊருக்குப் புறப்படணும். ராமுவுக்குக் கல்யாணம். ஒருவாரம் பயணம். ஆச்சியிடம் பாலுக்கெல்லாம் சொல்லிவிட்டு வா.''

ஆங்கில இதழை அந்தண்டை எடுத்துப் போட்ட பத்மா வேலைகளைக் கவனிக்கச் சென்றள். இரண்டு நாட்கள் கழித்து ஊருக்குக் கிளம்பினுர்கள்.

கல்யாணம் முடிந்தது.

ஒரு வாரம் கழிந்தது.

திரும்ப ஊருக்கு வந்து சேர்ந்தார்கள். யாரோ ஒரு பெண் பாலைக் கொண்டு வந்து வைத்தாள்.

வேலைக்காரி செய்தி கொண்டு வந்தாள். கிச்சா ஐயர் இறைவனடி சேர்ந்துவிட்டார்.

பத்மாவுக்கும் அவள் கணவருக்கும் ஒரே அதிர்ச்சி.

அவர்கள் ஊருக்குக் கிளம்பிய அன்றே அவருக்குக் காய்ச்சல் என்றர்கள்.

''ஆச்சிக்கு இப்படி ஒரு நிலை வேண்டாம்'' பத்மா வருந்தினுள்.

இருவருமாக ஆச்சியைப் பார்க்கச் சென்றர்கள்.

''ஐயா, அம்மா, வாங்கம்மா, என் சாமி என்னைவிட்டுட்டுப் போயிட்டாரும்மா. அன்று எனக்குத் தாய்மை ஸ்தானம் பெரிதாகப்படவில்லை. இன்று? — என் பெயரைச் சொல்லிக் கொண்டிருக்க எனக்குப்பின் ஒரு வாரிசு இல்லையே என ஏங்குகிறேன். இந்தச் செல்லம்மாவின் சகாப்தம் செல்லம்மாவுடன் முடிந்துவிடும்.'' ஆச்சி குழந்தையைப் போலக் கேவினுள்.

தேறுதல் சொல்லத் தெரியாமல் பத்மாவும் அவள் கணவரும் மௌனமாக வீடு வந்து சேர்ந்தனர்.

ஆச்சி ஊரைக் காலி செய்து கொண்டு தன் ஊருக்குச் சென்றுவிட்டாள்.

விதைக்கும் விதை எல்லாம் முளைப்பதில்லை. முளைப்பதெல்லாம் பூப்பது கிடையாது...... பூப்பது எல்லாம் பிஞ்சாகிவிடாது. பிஞ்சு எல்லாம் பெரிதாகி விடுவதில்லை. அதுபோல் ஆண்டவன் தெளித்த விதைகளில் ஒரு விதை ஆச்சி. அவள் ஒரு காவியத் தலைவி.....

முளைத்தாள்; பூத்தாள்; பிஞ்சு விடவில்லை.

அது யார் தவறு?

---

Printed and published by V. Vaidyanathan on behalf of Messrs. Bharathan Publications Private Limited at Kalki Press, Chetput, Madras-600031. Editor: K. Rajendran

Registered No. M. 4392
Registered as a Newspaper in Ceylon
இலங்கையில் விலை 60 சதம் (தபால் செலவு தனி)